தோற்றுதிவள்ளுகிருமவைதுறுமியதானுங்
கூறறெனகொளல்வாய்த்துகொம்மெனவெழுவேங்கை
யேறறுவன்னுதிகோட்டினிமில்விடைகுலைப்பநினைப்
பாறறுதலில்லையெனப்படாதெரிப்பனபோலும். (சுச)

குடகிகர்செருத்தற்றிண்கோட்டிளவனமேதி
யிடவியவறைநின்றுகன்றினையினிதூட்டிப்
படாதரவுதீம்பால்பசையறத்துவாந்ததனைக
கடறமாவாழகைகயினாகணிசசியின்வெளவுவரால். (சுரு)

மானினமுடல்சிந்தவால்வெடித்தெழுசிஙக
மூனிவாகும்பததினூறுசெய்நெய்தநோருங
சானிவாமதமூன்றுங்கதிரமணிவரன்றொழுகித்
தேனிவாவரையெல்லாஞ்சித்திரித்தனபோன்ற. (சுசு)

பாரிததவெறுழெருத்துப்பாணிறவுளவயமா
வாரிததவயிறகுவவுமத்தகத்துகுமணியுஞ
சேரிததமணிமருபபுஞசெறறுபுசுவையமிழதம்
பூரிததமதிகோடிபுணர்ந்தெனவொளிவீசும். (சுஎ)

ஆணடிநிழலோம்பியமர்துயின்மகண்மாவை
யேணமாவரைச்சிறுவரொயிற்றியரொனவண்மிக
காணுநாகாஞன்கிற்கன்னியரொனவியவாப்
பூணுறுபாசததாற்பூட்டினாபோதருவாா. (சுஅ)

புழுகொடுகத்தூரிபுள்ளுவர்பலர்கொண்மா
ரொழுகியவரையெஙகுமுலம்பியகரிநாடு
முழுவலிச்சியத்தின்முழககினுகருளமஞசி
விழுமவையெளிதாகவெஃகினாபெயாததெழுவார். (சுகூ)

ஏலமொடிலவங்கமிளகுபசசிலைமஞ்சள்
வாலியகப்பூரமணத்தகுஙகுமஞ்சாநத
மாலியவகில்வாழையாசினிமுதலாகச
சாலவினணவர்விழையுந்தகையனவகையனவே. (எ0)

கீறறுவெண்மதிக்கோடுகெழுமலிற்றொடைகீறிந
தேறறுளியுருவதனைத்தீம்புனறசுனைகெணடை
யேறறுணவாயணரியிருப்பனமறைமொழிவாய்
தோறறினர்புனலமுந்துர்தூத்தவாநிலைகாட்டும். (எக)

சிலையெனநனிவாங்கிச்செற்றியநெஞ்மிசையாக
கொலைபுரிமதவேழங்கொம்மெனவிடுவேழ
மலைபுரிதூணடிலெனவைவெனநிமிர்ந்தோங்கி
நிலைபுரிவாளியெனச்செந்நிலைநினறிடுமே. (௭௨)

அடிவரைத்தடமாரபமருவிகளகழந்தாங்குச்
சுடர்விடுவயிரங்கள்சுழிதருெழுநதிருபாலும்
வடிபெருங்குலையென்னவாரததிசையெழுபபியபோ
யிடவியபணைமருதத்திளம்பயிரவளாபபணவே. (௭௩)

மல்லிகைகொடிமுல்லைமாதவிசூதாளம
பல்லிணர்மந்தாரம்பாதிரிபுன்னாக
மெல்லிதழமலரபபிணடிவேங்கைசண்பகவாசத
தல்லுறழகுழலாரினருவரைநிகராமால. (௭௪)

நிறைநிகாகோங்கங்காய்நெட்டணிலிலவங்காய்ப்
பறைதருபருசோடும்பன்மயிலுகுபீலி
யுறைமதுமலாமயங்கியொண்டுகள்விரவிமண
வறையெனவறைபலவுமமரருள்ளமுமுடறறும். (௭௫)

குவட்டுமத்தகத்தோட்டிகுளிர்பிறைகொளவாங்க
ணுவட்டெடுத்தொழுகருவியொழுகுகையறைபுளகங்
கவட்டணிகொடிநிரைநீளகதலிநெட்டிலைசெவிபோா
சவட்டரசிபமென்னததகுவததிருமலையே. (௭௬)

வேறு.

இத்தகுவளஞ்சால்வெறபையெய்தியகுமரப்புத்தே
ளெததகுதொழிற்குந்தானேயிறையெனுந்தன்மைதேறிப்
பிததுறுமுலகமுய்யப்பெருகியகருணையோடு
முத்தமசூழ்றுடியொளிர்மணிக்கோயில்கொண்டான். (௭௭)

கதிரமணிக்குலங்கால்யாத்துககண்கவர்வனப்புவாய்ந்த
பிதிரொளித்தவிசினுச்சிப்பெருந்தவமுனிவாதேவ
ரதிர்கழல்வேந்தன்மாயோனடற்கணமவீரர்போறற
முதிரொளியெறிப்பவைகிமுதற்றொழிறொடங்கினுனே. (௭௮)

ஆக்கியபடைப்புக்கேற்பவளித்திடவல்லானென்று
பூக்கமழ்துளவததாரான்புரத்தலுந்தந்தைசெல்வம்
பாகக்கியமனையமைந்தர்பாலதாய்முடியுமாறறுற்
ருக்குருத்திரனூர்செய்யுந்தனித்தொழிலோடுஞ்செய்தான். (௭௯)

இந்திரநகரஞ்சமன்றேயிற்றதாலிவ்வாறெங்கோன்
முந்தியபடைப்புக்காப்புமுருக்கலோடுஞற்றிநீதி
தந்துயிர்மறைப்பினீக்கித்தனியருளுறுத்தாநிற்ப
வந்துவந்தொழிந்ததேவர்வருடங்கள்பலவுமாதோ. (அ0)

எண்குணந்தனக்கேயன்றியில்லதாயெங்குநின்ற
வொண்குணப்பொருளேயானவுத்தமகுமரப்புத்தே
ணண்குணத்தவர்தங்கோனுநயக்குமேயென்னலாங்கும்
வண்குணத்தவனேபெற்றினவயக்குமாலவாகக்கொன்றினறே. (அக)

முற்றியசெல்வநலகுமுதலவாபாற்றநுக்கினன்றே
சுற்றமுமினமுந்தானுந்துறப்பதற்கையமில்லை
கற்றைபஞ்சடிலத்தேவர்கந்தனையிகந்தவேதன்
மற்றவரோடுஞ்செய்கைமறந்தினைந்திருந்தவாற்றால் (அஉ)

பற்றிகறனக்கொன்றின்றிப்பணிபுரியடியார்க்கான
பற்றிகற்பூவிசேசகும்பராபரக்கடவுட்சேயவேலோன
முற்றுமந்தொழிலிறப்பட்டமூதுயிர்பெற்றபேற்றை
யிற்றெனக்கிளக்கலாமேயெஃகறிவுடையோர்க்கேனும். (அங)

கண்டவர்பிறவிமாய்க்குங்கமண்டலமக்கமாலை
கொண்டுநகரத்துச்சாரோவோர்கொடுமடயமொதுக்கிநல்க
வொண்டொடிக்கமலச்செங்கையோரிரண்டமைந்தவாற்றின்
விண்டலர்க்கடப்பந்தாரான்வீற்றிருந்தருளுநாளில். (அச)

பொறிவரிச்சுரும்புமூசாப்பொலந்தொடையமராவின்னணி
னெறியுளிசெங்கோலோச்சுநெடுந்தகையுலகமுண்ட
வெறிகமழ்துளபத்தொங்கலவிண்டுமாதவர்கள்யாருஞ்
செறிகதிரிமைப்பவீசுந்தெள்ளொளிக்கயிலைசார்ந்தார். (அரு)

வாயிலினந்திபாதம்வணங்கினாவிடைகொண்டேகிப்
பாயினபருமவல்குற்பைந்தொடியோடுவைகு
மாயிரநாமத்தண்ணலடிமலரன்பிற்றாழ்ந்து
மேயினதுதிகள்செய்துவிரிகரங்குவித்துநின்றார் (அசா)

தலைநிருச்சலப்பகிறகடவுளர்தம்மைச்செந்தேன்
றுவலைசெய்கொன்றைமாலைச்சுந்தரனருளிநோக்கி
நவிலுதிரவரவையென்னநெஞ்சுறயருஞ்சதும்யாமென்றா
சவலையீமழுனருசல்சாற்றுதியென்னச்சொல்வார். (அஎ)

இடும்பையங்கடலுட்டாழ்ந்தவெங்களையெடுக்கத்தோன்றுங்
கடம்பனையிளையனாகக்கருதிமென்கமலத்தோன்றன்
மடம்படுபேதைநீரால்வணங்கிலனீங்குப்போந்து
குடம்பையுளலண்டுபோலக்கோட்படும்வினையன்மீண்டான். (௮௮)

ஆன்வழிக்கொள்ளும்வேதனவன்றனைப்பற்றிவல்லே
யீன்வருகென்னவீரனெதிருய்ப்பமறையினாதி
யூன்வளர்பிரணவத்தினாறுபொருள்வினாவிமொத்தித்
தேன்வழிமழலைதந்தீஞ்சொற்செம்மலவனசிறையிலிட்டு. (௮௯)

ஆங்கவன்படைப்பினோடுமடிகளெம்பாங்கர்வைத்த
வோங்கியபணியுந்தானேயுஞற்றிவேங்கடத்திலவைகு
மீங்கிதன்பொருட்டுநின்னையெய்தினேமென்றுபோற்றப்
பூங்குழலுமையைநோக்கிப்பூரணனவாக்குச்சாற்றும். (௯0)

செம்மையஞானசத்தித்திருவுருக்கொண்டசெம்ம
லெம்மின்வேறல்லன்யாமுமவனின்வேறல்லேங்கண்டீ
ரம்மழவடிவினான்பாலன்புசெய்தவர்பிழைத்தோர்
நம்மடித்தொண்டுசெய்தோர்நவைபடப்பிழைத்தோராவர். (௯௧)

மிக்கவப்பிழையுட்பட்டவேதனுக்குறுத்ததண்டந்
தக்கதேயெவ்வாறனோன்றனைச்சிறைவிடுவித்திட்ட
ருக்குவந்தடுத்திர்நீயிர்சொல்லுமினென்னச்செந்தே
னக்கலர்கொன்றையான்முன்னடுங்கியவுளத்திற்சொல்வார். (௯௨)

பண்டிகந்திருளிற்பட்டபடர்பெரும்பிழையைநீயே
சண்டொருசெயலுமில்லாக்காலத்துக்கருணைவைத்துக்
கொண்டிடும்பருவநோக்கிக்கோனேமெய்யருளிற்றந்த
வண்டணிப்பிழையுள்வையாதளிப்பதின்றரிதுபோலும். (௯௩)

அவ்வயிற்சேறுமாயினடாகருமென்றஞ்சுகின்றே
மிவ்வயிற்சாவுமஞ்சியிருந்தனமின்றுகாறு
மொவ்வரும்பொருளேநீப்பினுய்யாங்குமேவமன்றவன்றி
யெவ்வயிற்சேறுமெந்தாயிரங்குசென்றிரந்துதாழ்ந்தார். (௯௪)

தாழ்ந்தவர்வறியராகாததன்மையன்கருணைகூர்ந்து
போழ்ந்தறாத்துயரந்தீர்மினெனவருள்புரிந்துபொற்று
ரூழ்ந்துகவமராந்தாக்கியொளிர்ந்தவேதந்திரந்தினைகையின்
வாழ்ந்திடுங்காவலானைவருகெனவழைத்துக்கூறும். (௯௫)

பொலங்குவட்டருவிதத்திப்பொன்மணிவரன்றிவீழ்ந்து
நிலங்கிழித்தொழுகியோடிநிமிரும்வேங்கடத்தையண்மி
யலங்கலங்கடப்பந்தாரானடிமலரன்பிற்றாழ்ந்து
நலங்கிளர்குடந்தமுற்றுநயத்தகுதுதிகளாற்றி. (௯௬)

உருவம்வேறன்றியைந்துமுகனாறுமுகனென்றோதுந்
திருவுருவிரண்டன்மாட்டுஞ்சிவமெனும்யாமேமன்ற
பொருவிலாருயிராய்நிற்பேம்பொலிந்தவிவ்வுருவினின்றுந்
தருவரமவனதாங்குத்தருவரமிவனதாமே. (௯௭)

மாதவன்முதலோர்வேண்டமலரவன்சிறையைச்சீக்கு
மேதமில்வரமீண்டாயிற்றிவ்வரமவனதன்றே
போதனைச்சிறையைநீக்கிப்புகுதகவினதென்றெம்மா
லாதருமின்றீஞ்சொல்லாவறைமதிமேன்மையோடும். (௯௮)

பைத்தபூஞ்சேக்கைமேலான்படர்பெருஞ்சிறையைச்சீத்து
வித்தகனிங்குமேவுமவனொடுமேகவென்றா
னத்தனவ்வருணமேற்றாங்கியருணந்திதேவன்வல்லே
தொத்தலர்குளிர்பூஞ்சோலைசூழ்ந்தவேங்கடத்தைச்சார்ந்தான். (௯௯)

எட்டிறப்பானுமைந்தனானுமங்கெதிரோவீழ்ந்து
மட்டலர்க்கமலமேய்க்குமலரடிபழிச்சும்வாயான்
மொட்டுறுகமலம்வெல்லமுகிழ்துணைக்கரத்தாற்சேர்ந்து
கெட்டிடறனுவிற்கோட்டிநின்றிறையருளீதென்றான். (௧௦௦)

அமலனாருளிற்றெல்லாமங்ஙனங்கிளத்தலோடுங்
கமலநான்முகத்தினானைக்காவலிற்பெயர்ப்பவேவிக்
குமரவேள்கயிலையனமிக்கோயிலைக்குறுகாநின்றான்
விமலனார்க்குணர்த்தினானல்விரைந்துமுன்சென்றுநந்தி. (௧௦௧)

அங்ஙனமணுகநண்ணியடியிணைவணங்கலோடு
மிங்ஙனம்வருதலென்னாவெடுத்தணைத்துச்சிமோந்திட்
டிங்ஙனமிருவிப்பின்னருவனுடைப்பெருமைதன்னை
யெங்ஙனமுலகந்தெள்ளுமங்ஙனந்தெளிப்பவெண்ணி. (௧௦௨)

முரிதிரைசுருட்டுந்தெண்ணீர்முழங்கிவிண்ணிழியக்கண்டு
புரிசடைக்கரந்தபெம்மான்புன்னகைமுகத்தினோடு
மெரியகைந்திலங்கும்வைவேலிருளையடுகக்கஞ்சூழ்ந்த
வரைபகவிடுக்கும்வென்றிமைந்தனைநோக்கிக்கூறும். (௧௦௩)

அறிவினிற்பெரியரோரறிந்தரும்பிழைகள்செய்யா
ரறிவினிற்சிறியரோரறிந்தறியாமையானுஞ்
செறிபிழையிழைப்பவவ்வதிறத்தினைதுணைமைநாடிச்
சிறுமையினீங்கினோர்கள்செயிர்த்துளவயிரங்கொள்ளார். (௧௦௪)

பேதைமைப்பாலினாதல்பெருங்கிழமையினாதன்
மேதகநட்டோரமாட்டும்விரவிடும்பிழைகளெல்லாங்
காதுதற்பாலவல்லகாதிடிற்கண்ணினோடி
னோதகவோச்சிமெல்லனோன்றவேயெறிகுவாரால். (௧௦௫)

பூவணைக்கிழவன்சான்றபுலனகத்தின்மையாலே
யோவியவணக்கதோடுமொய்யெனநம்பாலுற்றான்
மேவியபிழையுமொன்றேவிளித்தனையுணர்த்திப்பின்னுந்
தாவியவணக்கமன்றேதன்னமேபெரிதாக்கொண்டு. (௧௦௬)

துண்டமும்வாயுங்காதுந்துணைக்கணுஞ்சோரிதூங்க
வண்டமும்பொடிக்குமாற்றலருங்கணம்புடைப்பவேவிக்
கண்டகனைத்தாலன்னகடும்பாணிரந்தகோட்ட
முண்டகத்தவனைப்பன்னாண்முழுத்துயருழப்பவைத்தி. (௧௦௭)

பெருந்தவமுழந்துநம்பாற்பெற்றிடுந்தொழிலுநீயே
திருந்தறசெய்திநன்மைதீமைகண்டருளிககாத
விருந்தனம்யாமேயன்றியிடாதுமித்தின்பமேய்ப்ப
வருந்தியதேவாகவென்றேவந்தனைநினக்கிதாமே. (௧௦௮)

வேறு.

என்றுளக்குய்யம்வைத்தெம்பிரானருளலு
நன்றெனக்குமரனுநகைமுகத்துரைசெய்வா
னன்றினாககாலமாயணமினாக்கமுதமாம்
வென்றியங்கழலினாய்விரகிலானென்றனை. (௧௦௯)

விரகிலான்பிரணவமெய்ப்பொருளோர்கிலான்
பிரணவப்பொருளிலான்பிறழ்தராதுலகெலாம்
வரனுடைச்சிருட்டியின்வயக்குவானலனனை
யரவினாயெங்ஙனமளித்தனையென்றனன் (௧௧௦)

மைந்தநீயதன்பொருள்வல்லையேலுரையென
முந்துமெய்ப்பொருள்களுமுறையன்றியருள்செயர்
வெந்தையப்பொருள்பொழுதிடமறிந்தியல்புளித்
தந்திடத்தக்கதன்றேயெனச்சாற்றினான். (௧௧௧)

வாய்மையேகூறினேமாசிமாமகமிதோ
மேயதாணியுளம்விழைதகப்பயிலிட
மாயசோக்கணிகவெற்பமைமந்துளநதகப்பொருட்
கேயுமாறேந்குதுமேகுதுமவவயின (கஉ)

வந்தனேயோதெனவானவரிந்திரன்
பைந்துழாய்த்தொடையினன்படாகணந்தொடாதர
விந்துவிணிமிழ்கதிரிரசதப்புரிபொருஉஞ்
செந்துவர்ச்சடைமுடிசசெம்மலஙகணமிஞன் (கசங)

வளமலேச்சாரலின்வடகிழக்செல்லேயி
னிளமதிசசடையவிழததிம்பரிறஞூழ்த்துபு
களமிகுப்போரொனசகருதருந்தியானமோ
டுளமலிதவமொருகணிகமுற்றுனரோ (ககச)

வழிபடுஙகடவுளொன்றின்மையின்வடநிழல்
வழிபடுவோரொலாம்வடதிசைமுகமுற
வழிபடுங்கடவுளாய்வதிந்தவணஙஙனம்
வழிபடக்கநதனேமதித்தவணிருத்தலும். (ககரு)

என்றுமததாணியாவினிதுவீற்றிருக்குமக்
குன்றிடைப்பலரொடுஙகொம்மெனத்தோன்றுபு
மன்றலஙகொனறையான்வதிநதவசசூழலிற
றென்றிசையெல்லேயைசசோந்தெதிரவைகிஞை. (ககசு)

ஏதிருறுங்குமரனேயிருந்தவிசேறறியங்
கதிகழல்வநதனேயதஞெடுந்தாழவயிற
சதுர்படவைகுபுதாவரும்பிரணவ
முதுபொருட்செறிவெலாமொழிதரக்கேட்டனன். (ககஎ)

தனக்குததானேமகஞகியதத்துவன்
றனக்குத்தானேயொருதாவருஙகுருவுமாய்த்
தனககுத்தானேபருட்டத்துவஙகேட்டலுந்
தனக்குத்தாளிகரிஞன்றழுஙகிரின்முடிஞன். (ககஅ)

வேறு.

சாருமெவ்வுயிருந்தன்வயமாககித்தளர்சகுமாணவப்பகையோடுஞ்
சூரனேமுதலாந்துளக்கரும்பகையுந்துலங்குமிப்பிரணவப்பொருளாம்
வீரனில்ன்றேவிளிந்ததென்றுளத்துவிளைந்தெழும்வீரத்தின்குறிப்பி
ஞரமர்முடியோஞர்த்தலிஞயதவ்விடம்வீராட்டகாசம். (ககசு)

மரணமும்பிறப்புங்கடந்தபேரின்பம்வழங்குமப்பெரும்பெயரி
றைக்குப், பிரணவப்பொருளைகொடுத்தகாரணத்தாற்பிரணவவருத்தக
ன்னகரா, மிரணவல்லவுணக்கிளையெலாமுருக்கவிலங்கருட்டிருவுருத்
தாங்கி, யரணமாயமரர்ப்புரப்பவனென்றுமமர்ந்தருடணிகைமாநகரம்.

பணிகிளராரப்பணவன்முருகற்படர்ந்தருந்தவத்தினையாங்குக்
கணிகமேபுரிந்துகருத்துமுறறுறலாறகணிகவெற்பெனப்பெயர் விளங்கு
துணிகதிரிமைக்குநவமணியடுக்கஞ்சூழநதவச்சிலம்புமற்றின்று [ந்
மணிகிளாதவங்களாதியோாகணிகமாற்றினுமரும்பயனடைவாா. ()

மூலமீறிகந்துமூலமேலில்லாமூலகாரணப்பொருடனக்கு
மூலமாயிருந்துநால்வகைப்பொருட்குமூலமாகியவருமறையின் [யான்
மூலவான்மொழிகருப்பொருட்செறிவெவர்க்குமூலமானவன்விரித்தமை
மூலவேதண்டமெனப்படுங்குறவாமூலந்தேரருவரைப்பறம்பு. (கஉஉ)

ஒருகையிலக்கமணிவடமொன்றிலொளிாமணிக்கமண்டலமற்றை,
யிருகரமபயவரதமாயங்கணிருநதேசிகனையன்றுடங்கு,மருவினாபோ
ற்றிநால்வகைப்பொருளுமல்கவிஞறுமப்பெயாத்தாம், பொருவிலச்சயி
லமின்றுநாற்பொருளினபுணாசசிக்குமூலமாய்ப்பொலியும் (கஉங)

உருவினெஞ்ஞான்றுமிளமையிற்றளராவுத்தமணிறைமையெண்
குணத்துப், பொருளினஞான்றுமுதுமையிறறளராப்பொலிவுகண்டி
மையவாதிருமா, றருநிழலரசன்மாதவரொல்லாஞசாமிநாதப்பெயாகிளந்
து, மருவியமகிழ்ச்சிதிளைத்தனரப்போவழங்குமாலன்றுதொட்டென்
றும். (கஉச)

ஆாத்துநின்ருடும்வீராட்டகாசத்தடிகள்பின்பாருயிர்புரப்பான்
சீாததமெய்யுருவேசிவலிங்கவுருவாய்த்திகழவீற்றிருந்தனன்மாதோ
வாாத்தசெஞ்சடைதாழதிருவடையாளம்வயங்குமச்சிவலிங்கவடிவைப்
பாாததவாபணிந்தோாபழிசசினரொய்தும்பயனெவாபகாதரற்பாலாா. ()

அத்தகுவரைப்பின்வீராட்டகாசத்தடிகளாசான்வழிபாட்டிற
கொத்தநற்றீாத்தமகழ்ந்தவாாசடிலதரொணபுனல்பாய்த்தினாநிறைத்து
வைத்தனாதனற்சிவகங்கைநாமம்வழங்குமத்திருத்தீாபடிந்தோா
பொத்துநோய்திராதனவெலாந்தீாந்துபோகமும்வீடுமெய்துவரால். ()

அன்றுடங்கணேந்தோர்படிந்துவேற்கரத்தாசாரோடுவீராட்டகா
சத், தொன்றுநாயகனைப்பணிந்தெவற்ருனுமொழிபபருமுடனுயிாப்பி
ணிகண், மன்றநீத்தெண்ணும்வரங்கள்பெற்றுய்ந்தாாமதிததுறினளவி
னிற்படாராற், பின்னையுமதிற்றோய்ந்திற்றைநாள்காறும்பெரும்பிணி
யிரித்தவாமாதோ. (கஉஎ)

உட்டெகண்முழுதும்பரிந்துமெய்ப்பொருளினெருக்கியவறிவினீர் தழங்கி, நட்டநின்றியற்றும்வீரட்டகாசநாதனூர்சிறப்பெடுத்துரைத்தன ம், சட்டமூவுலகும்போற்றவீற்றிருக்குஞ்சாமிநாதனுமகிழ்சிறந்தாங் கெட்டுருவுடையோனருட்குறிநிறுவியயறறுபூசனைத்திறங்கிளப்பாம்.

## வீரட்டகாசப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—ருசாகூ.

—•◦◦—

## குமாரேசப்படலம்.

யாவருக்குமெப்பொருட்குமின்பமெய்தநின்றவா
மூவருக்குமின்புறுத்துமூவிருதிறத்தருந்
தாவிலின்பமெய்தநின்றதத்துவத்தனென்பவா
லோவிலின்பவுருவமானவொளிகுமாரவீசனை. (க)

வேறு.

காயமல்கமராண்மைதபுகாரியுதரம்
போயிருந்துபுறனேகுபுகொன்னமுகிறோய்
வேயினின்றமணிவிண்டுவெளிவந்துதிவளு
மீயுயர்ந்தகணிசாசலவிசாகனொருநாள். (உ)

கானரும்பியகடுக்கையுமெருக்குமலையா
வானவர்க்கரியநாடகநவிற்றுவரதன்
ஞானசத்தியினைநல்கியகுறிததவிழைவி
னூனபதிமையகத்தெழவருச்சனைசெய்வான். (௩)

வயிரவீட்டிகணிரைத்தொழுகவைத்ததுபொரப்
பயில்செழுங்கதிர்கொழுந்துகொடுபம்பிநிமிருங
கயிலைவெற்பினமாகங்கையைவரக்கருதினன
வியநெடுங்கிரியடிக்கணெதிரமேயததுவே. (௪)

வெள்ளியங்கிரியின்மீதமர்திருத்தமணிக
டெள்ளொளிக்கதிரபிலிற்றுகணிகச்சிலையடி
நள்ளுகின்றதுநலத்தகயிலைக்கிறைதொழூஉம்
வள்ளல்வெற்பெனமதித்தடிவணக்கநிகரும். (௫)

பன்மணித்திரள்கொழித்துமலர்பம்பியினவண்
டன்னநேமியுமகன்றிலுமணிநெதாளிாதலான்
மன்னடுக்கன்மகள்வண்கடிதடத்தணிதரு
மின்னலங்குமணிமேகலைவிழைந்ததுவே. (௬)

ஆம்பலுற்பலமகேகிதழ்நறுங்கமலமுந்
தாம்பயினறனதயஙகியிருபோதுமலரா
யாம்பிறஙகுவரமீகெனவெனைத்துலகமு
மோம்பியாகமுருகற்பணியவுற்றனபொரூஉம். (எ)

இருசுடாக்கிரணமெய்தலறியாதிரசதப்
பெருவரைக்கனொருபெற்றியினிருந்தமலர்க
ளிருதிறததனவிருப்பனகள்கன்னிமைகழீஇ
மருவுமனபணைமணந்துபிரிமங்கையாபொரூஉம். (அ)

ஓதிமமபுடையிருப்பவொளிரசெங்கமலம்வீழ்
மாதாவண்டுபொடிமல்கியபராசரன்வளர்
வேதமந்திரவிழுத்தழல்விளைந்துகுமவன்
முதையாக்கொலேபுரிந்ததகுவோாகினேபொரூஉம். (கூ)

மேலவாந்தலேயகீழ்த்தலேயகீழ்த்தலேயன
மேலவாகுநிழமேறறுவிரிசீாவிணயிறுன்
மேலவாம்பொருள்கிழக்கனகிழக்கிடுபொருண்
மேலவாஞ்செயறெளிக்குமொருசான்றுவிழை யும். (௧0)

காதாந்தபவிளங்குகணிகாசலநிழல்
போதவுட்பொதிதிருத்தமொளிபொங்குவளையை
மாதவத்துறுதியானவழியான்மனமிசை
யாதாத்தமரவைத்தமைவுபெற்றதுறமும். (கக)

ஓங்குதூவிகையமாடநிழல்செய்யவுதன்மேற்
பாங்காரீள்பொழின்மதுப்புனல்பனிப்பதவைசோ
தீஙகுதீாத்திடுபதிட்டைதெளியாடியினிடைத
தாங்கிவாாபுனல்பொழிந்துபுரிதன்மைநிகரும். (கஉ)

நின்றிருந்துகிடையுற்றுநிகழ்வேள்வியினிடை
மன்றபன்முறைவருந்துவதுதீரமுழுகி
யொன்றிருந்தவமுஞற்றுபலவஙகியுறமுந்
துன்றுதூவிகளினேற்றுசுடர்தோற்றுவனவே. (கங)

தூவிவெண்குருகுதோற்றுகுரஞாபுரமென
மேவவாளைநெடுமீனம்வெடிபோய்விழுவன
காவிரோவிழியகூத்தியர்கதித்தசதியிற்
றுவியந்தரமறிந்துவருதன்மைபுரையும். (கச)

வேறு.

பெருகியவித்தருவளத்திற்பெட்புறீஇக்
கருவினைதபுங்கயிலாயகங்கையை
வருகெனவழைத்தவன்மறுவின்மாயையிற்
பொருவில்பல்பொருள்களும்பூத்திட்டானரோ. (கரு)

இலக்கணமுழுதமையிலிங்கம்வேதிகை
யலககணந்தித்தவர்விழையுமாலய
மலக்கணம்விடைகொணமணடபஙகள்கோபுர
நலககணமணிகொடுநவமதாக்கினன். (கசா)

பித்திகையெங்கணும்பெருகுமான்மத
மெத்தியசந்தனவிழுதுசொட்டுபு
பைத்தெகூவிரைப்புகைபாய்த்தியோசனை
பொத்தியமணங்குலாம்பொறபியற்றினன் (கஎ)

தூண்டொறும்வாருறைசோத்தித்தூங்குகாய்
மாணடமென்கதலிவாாகரும்புபூகத
மாண்டுறுத்தும்பரினவிரபொற்பட்டினற்
காணடகுவிதானங்கள்கற்பிததிட்டனன். (கஅ)

ஆடகத்தகடுகளடுத்தகீழ்நிலம்
பாடமைமணித்துகட்பசும்பொற்சுண்ணநீர்
நாடருவிரைகலந்தொழுககினன்மணி
தோடவிழமலரறுகரிசிதூவினன். (ககூ)

பொன்னரிமாலையும்போதிறழுங்கலு
மின்னருபன்மணிவிராயகோவையுந்
துன்னியகனிகளுந்துலஙகுமாடியு
மென்னவுமணிபெறவெஙகுநதூககினன் (உ0)

தோரணமெங்கணுநதொடரிபபல்கொடி
காரணவிசும்பெலாங்களுற்றிப்பாலிகை
பூரணகும்பங்கள்பொலிந்தவேதிகை
யேரணவியவிளக்கினமுமீட்டினன். (உக)

வட்டகைவலம்புரிவளைபொற்பாசனங்
கொட்டொளிப்படலிகைகொடியகளுசட
ரிட்டசைப்பனவெழிலாடியாதியா
முட்டறயாவையுமுறையுயிாத்தனன். (உஉ)

எண்ணெயாமலகமாமஞ்சள்பாறயிா
தண்ணெய்தேன்வேழத்தின்சாறங்கைந்தென
நண்ணமிாதிரதங்களுளிகோரநீ
ரண்ணலங்கனியருவிளையுமாாத்தினன். (உ௩)

தேசவிர்கலைகளுந்தெய்வமாலையும்
பூசமைசாந்தமும்புகையுஞ்சுண்ணமுங்
காசவிாகலன்களுங்கனிந்தபல்சுவை
நேசமல்கமிாதமுநிளைத்திட்டானரோ. (உ௪)

சூருயிர்குடிப்பவன்சுத்தமாயையி
ஞரவிவ்வகையெலாமமைத்தபின்மணி
வீரருமிலககரும்விழுமம்வீழ்த்துயா
பாரிடத்தலைவரும்பரிபபவேவினுன. (உ௫)

வேறு.

கள்ளவிழபன்மலர்களுலுங்கயிலாயகங்கையெனுந்
தெளளுதிரைமணிகொழிகருந்திருத்தநீாபுகுந்தாடி
யொள்ளியவேறுடையுடுதெதிட்டொளிாபூதிமுழுதணிந்து
வள்ளல்விழிக்கதிததமணிவடம்பலவுந்தாஙகினுன. (உ௬)

பல்லியமபல்கணமியம்பப்பணணவாபல்லாணடிசைப்ப
மெல்லியல்விண்ணரமகளிர்மின்னிறுடஙகினர்நடிப்பச்
சொலலமிழதமிடற்றிசையுஞ்சுடாமணியாழ்நரப்பிசையுங்
கல்விளகபபரந்திசைப்பககதிாமணிககோயிலையடுத்தான். (உ௭)

தானிருக்குந்திருவெல்லைதனககுவடகீழ்ஞாங்க
ராணிருகசைகொளவாவச்சகாயனையன்பொடமிருத்தி
வாணிருககுமளப்பரியவழிபாடுபுரிந்தருவித்
தேனிருக்குமலாக்கடப்பந்தெரியலான்மகிழ்வித்தான். (உ௮)

பிணிகிழஙகினெடும்பெயர்த்துப்பெயராதநிலையருளுங்
கணிகைவளையடிச்சாரறகயிலாயகங்கைமுகந
தணிகிளர்பன்னிறைநிரப்பியல்லனவும்பலாபுரியத்
தணிவிறனதிருக்கைவடசாரமைத்தவாலயத்துள். (உ௯)

கருவிகளுமறியாமைகதுவவருகேவலமு
மொருவியெழுபரஞானத்துளச்செயலைந்தபத்தோற்றும்
பெருகுபரமானந்தப்பெருநிலைமைப்பொருளேயா
முருகனருட்குறிப்பதிட்டைமுறையியற்றிப்பூசிப்பான். (௩0)

குருமணியினொளிப்பிழம்புகொழுந்தோடிப்பல்கணியாய்
மருவுகதவெனத்தோற்றுமணிவாயிலிருபுடையும்
பொருவில்பரமபரமெனப்புகன்ஞானமிரண்டனையு
மருணிலையுந்திருவெழுத்தினருச்சனைசெய்தமைத்திட்டான். (௩௧)

பூதமுதற்கரணமெலாம்புறமாகவகம்புறமற்
றூதரவினிடைமூழ்கியமைத்தபொருளவையனைத்தும்
வேதமுடிகடந்தொளிரும்விழுப்பொருளினிறைவாக்கித்
தீதணுககுமஞ்செழுத்துஞ்செயிராவிரவாமுறைமாறி. (௩௨)

பாதமுகமுடிக்குதவுபாத்தியமாதிகளெல்லாம்
பேதமறுமருள்கடந்தபேரெழுத்தினினிதமைத்தங்
காதனமுமூர்த்தியுமூலமுமங்கத்திருவெழுத்தா
னேதமறவுயிரொலாமிணாமலர்கொண்டருச்சித்தான். (௩௩)

அளியாகியொளியாகிவெளியாகியளவாகுங்
களியாதபொருட்கலப்பிற்கதித்தசுகத்தப்புறமாய்
விளியாதசுகம்பெருக்கிவிளங்குதிருவுருக்குளிர்ப்பத்
தெளியாமுந்தயிலமுதற்செறிவனைத்துமாட்டினான். (௩௪)

விழைதருமென்கலிங்கத்தான்மெய்யீரந்தபப்புலர்த்தித்
தழையொளிநாணகோவணம்விற்றதைகதிர்ப்பூம்பட்டணிந்து
குழைகலவைச்சேறெங்குங்கொட்டிமணத்துகளட்டி
மழைதவழுவதெனவிரைகண்மடுத்தபுகைதவழ்வித்தான். (௩௫)

குண்டலமுங்கதிர்த்தோடுங்குருக்கிளர்பொன்மணிமுடியுங்
கண்டசரமங்கதமுங்காழ்பணியுமலர்த்தொடையு
மொண்டொடியுமோதிரமுமொளிருதரபந்தனமு
மண்டுகுரனூபுரமுமற்றுமெடுத்தலங்கரித்தான். (௩௬)

பாறயிர்நெய்புளிகடுகுபயறுசருக்கரைதிலகம்
வேறுவிரவியவல்சிவெற்றன்னங்குய்க்கருனை
யூறுசுவைசசிற்றுண்டியொண்வறையல்கனிபுனலுந்
தேறுமனுமொழிந்தமுதுசெய்தருளமகிழ்சிறந்தான். (௩௭)

வேறு.

பூசுபுனல்கரத்தேந்திப்பாத்தியமாசமனமருக்கியம்பூரித்து
வாசமலிபாகடையின்சுருணீட்டிமணித்தூபந்தீபம்வட்டித்
தாசறுபஃறீபவாராதனையும்புரிந்தாடியாதியுய்த்து
நேசமலிபுகழ்பரப்பிவலம்வந்துநிலத்திறைஞ்சிநின்றானங்கு. (௩௮)

வாளாங்குவைகுறினுந்தாமேவந்தருள்புரியும்வாய்மைமைந்தன்
றாளாண்மைத்தலைநின்றவழிபாட்டிற்றரிப்பபோதனயன்காண
வேளாண்மைவித்தகனாரவணணிந்தவணிமுழுதும்விளங்கவிண்ணோர்
நாளார்ந்தமலர்தூவக்கணநெருங்கநயந்ததிரோநண்ணினரால். (௩௯)

மறுவலும்வீழ்ந்தெழுந்துநின்றதிருமகனைமுகநோக்கிவரமேதெ
ன்றார், முறுவனிலவெழக்கனிவாய்முகிழவிரித்துமுடித்தலைவிண்ணவ
ரமேலென்றுங், கொறுகொறுக்குமவுணருயிர்குடித்திடுநுஞ்ஞானசத்தி
கொடுப்பதென்றா, னறுகுமலிசடைமுடியாரதனொடுபல்வரமளித்தவவி
லிங்கத்தானா. (௪௦)

இருளனுக்கியொளிபெருக்குமவ்விலிங்கங்குமாரலிங்கமெனும்போபூ
மருளிரிக்குஞானசத்திதரித்தலினறைகணிகவளாவாழ்க்கைபூண்ட [னு
தருநிகாத்தகுரிசிலுக்குஞானசத்திதரனென்னச்சாற்றுநாமம்
பொருண்மிகுத்தபலபெயரின்மிக்கபெயராயங்குப்பொலிந்ததன்றே. ()

வெள்ளிவரையிருந்தலினற்கயிலாயகங்கையெனவிளங்குந்தீர்த்தந்
தெள்ளுபுகழ்க்கணிகவளாக்குமரனழைத்தாடிமகிழ்திளைத்துமுகககண
வள்ளலுக்குமாட்டுதலாற்குமாரதீர்த்தப்பெயரின்வயங்குமப்பே
ருள்ளினவரொழுபவதிற்காதரமுமெழுந்திரியவுருககுமாலோ. (௪௨)

கும்பமதிவருமகத்திற்குமரவேளினிதாடிக்குழகற்காட்டும்
வம்பவிழ்பூங்கயிலாயகஙகையிடையம்மதியின்மகததிற்சென்று
கம்பமறப்படிந்தாடிக்குமாரலிங்கந்தொழுவோர்கள்கரிசினீங்கி
யும்பருக்குமறிவரியசிவலோகத்தெஞ்ஞான்றுமுறுவர்மாதோ. (௪௩)

எத்தினத்தாயினுமொருகான்முழுகினரொப்பிணியுமெழுகாதமோப்பிப்
புத்தியறிவாயுள்சுசிபுகழ்சூழ்ச்சிவீரம்வலிபொருண்மேம்பாடு
மித்திராபுத்திரமனைவிமுதலானவெறுகைகையெலாமேவியீற்றிற்
கொத்தினொடுங்கந்தலோகததையவனுருககொண்டுகுறுகிவாழ்வார். ()

செங்கமலமலரோய்க்குமொருதிருக்கைகுறங்கமைத்துச்செம்பொன்மே
ருத், துங்கவரிச்சிலைக்கடவுளருண்ஞானசத்தியொருதொடிக்கையேந்தி
ப், பொங்குமருட்கருணைவிழிக்கடையொழுகமலர்ந்தமுகப்பொலிவி
னோடு, மங்கணமாஞானசத்திதரனையகத்துறநினைப்போரவனேயாவா.

ஐம்பொறியின்வழியொழுகாதவற்றைவியங்கொண்டறிவின்மய
மேயாக்கிக், கொம்பனையாளிடத்தரனைவழிபாட்டினினிதேத்துங்கொ
ள்கைமிக்கோ, பம்புகதிர்மதிமோலிப்பரமாமகிழ்குமாரலிங்கப்பரிசுசொ
ற்றும், வம்பவிழ்பூவணைக்கிழவன்மாதவஞ்செய்தருள்பெற்றமரபுஞ்
சொல்வாம். (௪௬)

## பிரமன்சிருட்டிபெறுபடலம்.

ஒன்றாகிப்பலவாகியுருவாகியருவாகி
யன்றாகியாருயிர்கட்காருயிராய்நிறைந்தானும்
பின்றாழுஞ்சடையானும்பிறங்குநுதலவிழியானும்
வென்றாலும்விடையானும்விருத்தபுரிவித்தகனே. (௧)

வேறு.

பூரானுஞ்சிறைவண்டினமொய்த்துளரு
மரவிந்தமமர்ந்தவனாறுமுகன்
விரவுஞ்சிறைவிட்டபின்விண்ணுயர்தன்
பரவும்பதிசென்றுபதிந்தனனால். (௨)

காராகிரகங்கழிவுற்றபினு
மாராவமுதாயவருட்பரமன்
சீராருளாற்செய்கிருட்டிசெய
வாராமையினேகைமனத்திலனே. (௩)

அந்தோவிதுநாஞ்செயலாம்வழிமற்
றெந்தோவெனவெண்ணியசூழ்ச்சியினான்
முந்தாரணமுந்தெரியாமுதலவன்
றந்தானவனேதரவல்லவனே. (௪)

தலைவன்சரணஞ்சரணம்புகினம்
மூலமந்தபவத்துயரோடுமிவ
ணலமந்தவருந்துயருந்தவிர
நிலவுந்தொழிலெனறுநினைந்தனனே. (௫)

உத்தாலகவாரணியப்பெயருற
றித்தாரணிபோற்றவிருந்தபதி
வித்தாணவமாய்க்கும்விழுத்தவரோ
டத்தானமகன்றடைவுற்றனனே. (௬)

வேறு.

கரந்துவைகினுங்கற்றவாதம்புகழ்
நிரந்துதோற்றப்படுவதுகோமணுட்
பரந்தவோப்பலவின்பழம்யாவாக்குஞ்
சுரந்தவாசத்திற்றோற்றுமொர்பாலெலாம். (௭)

உறும்பலாயிரவண்டமுடம்பெலாம்
பெறும்பராபரன்பெற்றிநிகாப்புற
நறும்பலாயிரநன்கனிதூங்கிய
குறும்பலாவின்குழாமொருபாலெலாம். (அ)

ஆணவப்பிணிநீங்கவரும்பயன்
மாணநல்கரன்மானமந்திகுலங்
காணுமென்கறியைககறித்தாழ்பறழக்
கூணிருநகனியூட்டுமொாபாலெலாம். (கூ)

அருவிதொட்டவறைக்குழிமாத்தன
கருவிமூந்திரிசைப்பழமீநதின
வுருவவின்மதுவோடுசுக்கேடின்றிப்
பருவமன்றிப்பயப்பவொாபாலெலாம். (க0)

காலமன்றியுங்குற்றுக்கடவுளர்
பாலளிப்பப்படாதவத்தாலளி
மேலடாதனபோல்விளைச்சண்பகச்
சோலைவிண்ணந்துழாவுமொாபாலெலாம். (கக)

சுனைமலர்க்கணந்துற்றுவவென்றுதே
னினையவானையிடிததிறைகொள்வபோற்
றுனையவும்பாத்தொடுத்தவிருல்கிழீஇ
நனையுருக்குநலத்ததொர்பாலெலாம். (கஉ)

வண்டுபோய்மலர்க்காந்தளின்மூசுதல்
கணடழறருட்கவிழ்ந்தனவென்றுநீ
ரொண்டுநுணடுளிதூஉய்ப்பெயாததோகையுட்
கொணடுமந்திகுனிகுமொாபாலெலாம். (கங)

இனியசெய்கையாயாங்குளரோவெனத்
துனியில்கேள்வியாசூழநதனாநேடல்போற்
புனிதமென்கிழங்காதிபுனைகிளைஇத்
தனிவில்வேடாசரிப்பதொாபாலெலாம். (கச)

தூசுமின்கலனும்விளையுந்துதை
வேசிமாதரின்வேழக்கதலியிற்
பூசல்வேழம்புணர்ந்துவிடுநதிற
மாசுமிலபயம்பார்ந்ததொாபாலெலாம், (கரு)

வீங்குதோட்குடைவேய்வியங்கோளுநீஇ
யாங்கணிற்பதமரவணங்கனா
தாங்குதீம்புனஞ்சார்புட்குலந்தப
வோங்குமுத்தெழவூழக்குமொராபாலெலாம். (கசு)

மென்மையாரிடம்வாய்த்துமிகுததுறின்
வன்மையார்வலிமாய்ப்பதுகாட்டுமென்
றன்மையாரருவிததிரளசான்றகற்
புன்மையாகப்பொளிநதொருபாலெலாம். (கஎ)

கெழுமுபாவங்கிட்டாதுபெயர்ப்பபோல்
விழுமவெள்ளருவித்திரள்வீழவன
விழுமெனேதையுமந்தரத்தின்னியங்
குழுமுமோதையுங்கூர்குமொராபாலெலாம். (கஅ)

அரம்புசெய்பிணிதீர்வெறியாட்டயர்
வரம்பிற்றெண்டகவங்கியவோதையு
நரம்பினேழிசைநாவியற்பாடலுஞ்
சுரம்பொற்கென்னத்துதையுமொராபாலெலாம். (கக)

அற்பகத்திமையாரணமிச்சிந்திய
கற்பகக்கடிப்போதுங்கலன்களும்
பொற்பகப்பொழிலகைசெய்தெனப்பொலீ
வெற்பகத்துவிளங்குமொராபாலெலாம். (உ0)

தென்றல்சந்தனஞ்செந்தமிழென்றிவை
நன்றளிப்பநறும்பொதியந்தழீஇ
நின்றதாங்கொருபாலெனநீண்டவக்
குன்றெலாமவைகூர்ந்தனமிககரோ. (உக)

இருபுடைக்கணிருபெருந்தேவரு
மருவநாப்பண்மதலையிற்றுங்கிய
வொருபெரும்பெயருத்தமன்போன்மெனப்
பொருவின்முததலைபூத்ததகுன்றமே. (உஉ)

இச்சைஞானந்தொழிலிவைமூன்றனு
டச்சணின்றனைத்தும்விளைத்தாலென
முச்சிரத்தொடுநின்றுமுறைமுறை
பொச்சமில்வளம்பூப்பதக்குன்றமே. (உங)

முதநொழிற்குரியாரொருமூவரு
மெய்த்துருமையினிதுறத்தாங்கியோா
கத்தனுணடெனககாட்டுமாதாரமா
யதநிரிககுவடேந்துமடுசககலே. (உச)

மூன்றுமெய்ப்பொருண்மூன்றுமொற்றிததலிற்
ரூன்றுமொன்றெனவென்றுதுணிப்பபோன்
மூன்றெனச்சிகரம்முகிழ்தநொன்றெனத்
தோன்றநிறகுமூலத்தினதநொல்வரை. (உரு)

ஈணடுப்போந்தவரிம்மைமறுமையு
மீணடுறுதமெய்வீடுமுறுபவென்
றுணடித்தானருளும்பயன்காட்டலு
மாணடதான்மும்மணித்தலையோஙகலே. (உசு)

மூவர்மும்மறைமூவகையாருயிா
மூவகைச்சுடர்மூவுலகுந்தொழு
மூவருந்தலைவன்னுருமூவகைத்
தாவதுநதெரிககும்மவ்விலஙகலே. (உஎ)

இலைமுகப்பசும்பூண்களிடையிடைத்
தலையமைத்ததனிவரைமாாபக
நிலையுமாரநிகாத்திடுமபல்சுனை
யுலையவீழ்நதிழிந்தாருமருவியே. (உஅ)

ஆங்குநாதனருணடமாடுத
லோஙகுமப்பதியொண்மைவளத்தினுக்
கியாங்குமொப்பிலையென்றுமதிததுளந்
தாஙகுமின்பத்தருக்கெனத்தக்கதே. (உகூ)

அறுதியாகியவணணலமாந்தவத்
தெறுதுத்தாலகத்தேத்தினையண்மினன்
மறுதிமம்மாத்தணநதுமகிழ்கொள
விறுதநாககுமிருந்தவமாற்றினன். (௩௦)

வேறு

வருவைகலின்வாராதெழுவாமான்மணியிரதத்
தொருசெங்கதிரமரன்றணவுறினும்வரவொழியா
வருவிப்புனன்முக்காலமுமாடிபபொடிபூசித
திருமல்கியவருள்கணமணிசிரமாதியினணியா. (௩க)

குழகன் றிருவுருவாங்குறும்பலவுங்குழகன்மெய்
நிழல்செய் தமாகுற்றாலமுநிமலந்தருமிறைவ
னழகொன்றியசபையுந்தொழூதன்பாலருச்சனையுந்
தழையச்சிவலிங்கத்தினியற்றித்தவமுறுநாள். (௩௨)

வட்டச்சடையத்தாணியின்மலர்மெல்லணைமேலா
லட்டுத்தழலரவங்குடையாகக்குளிர்மதியம்
விட்டுக்கதிர்விரியப்பயில்வீறுய்த்தருள்விமலன்
மொட்டுகுவிமுலைமாதுடன்முன்னேயெதிர்நின்றான். (௩௩)

கண்டானுடல்கவலைக்கடறாழக்கடிதெழுந்தான்
றண்டாமரைநுண்டாதுதயங்குந்தடமார்ப
மண்டான்படியத்தண்டெனமலர்மெல்லடிவீழ்ந்தான்
கொண்டான்வலமெதிர்நின்றுகைகுவியத்துதிபுகல்வான். (௩௪)

எண்ணாதிகழ்தக்கனமகமியற்றக்குழுமுற்ற
விண்ணோருடல்சிதறுந்தனிவீரன்றனையிகலி
மண்ணாழ்தரவிழிகங்கைமடுத்ததிறல்சிந்துந்
தண்ணார்மதிமிலைச்செஞ்சடைத்தந்தாயடிபோற்றி. (௩௫)

கழைவார்சிலைகுழையக்கடிமலர்வாளிகணிமிர
விழைபோர்புரிமதவேளுருவிளியத்தழல்வெந்தீ
யுழைநோவிழியுமையாள்கரமொளிர்கண்ணிணைகதுவத்
தழைபேரிருளிரிகனைறுமிழ்தலைவாவடிபோற்றி. (௩௬)

இன்னற்கடனடுவெட்படியெளியேமுறைகேளா
மன்னிக்கிளரின்பக்கடல்வதிவித்தருள்செவியை
மின்னிக்கிளர்வன்னித்தலைவெதிர்பட்டிறவுலக
முன்னிக்கிளருழைவாய்க்கருணைமுதல்வாவடிபோற்றி. (௩௭)

அழல்போலுயிர்முழுதுஞ்சுடுமெஞராணவமொருவக
குழல்வாய்மொழியுமைகாணமுகிழ்க்குங்குறுநகையா
லுழலாவுலகொருமூன்றினுமுறையும்புரமூன்றுந
தழல்வாய்விழமறநல்கியதந்தாயடிபோற்றி. (௩௮)

மருளாதுனையறியும்வகைமாலாதியெல்லேமு
மொருவாதுணர்மறையாகமமுதவுந்திருவாயாற்
றெருளாதுலகேழும்பொடிசெய்யும்வலையாளி
வெருளார்தரவுயிருண்டருள்விமலாவடிபோற்றி. (௩௯)

இரந்தாருலகோரேழினுமிவரோயிறையென்ன
வரந்தானனியெளிவந்துவழங்குங்கரமலரி
னுரந்தாவியவளியேன்சிரமொன்றொய்யெனவாங்கிப்
புரந்தானுடல்சூலத்திடுபுனிதாவடிபோற்றி. (௪௦)

முத்திப்பதமொருமூன்றொடுமுழுதுங்கழூதிரதஞ்
செத்துப்பணியடியார்சிரஞ்சோத்தின்பருள்பாதத்
தெத்திக்கினும்விளையாக்கலியிவர்வீத்தமரியமன்
மைத்துத்திணியுடல்பொன்றியவரதாவடிபோறறி. (௪௧)

அருள்செய்வனபுரிதண்டமுமருளேயெனுமுண்மைத்
தெருளொன்றுமுளத்தானருள்செயவந்தருண்முருகன்
வெருளொன்றியபுரிதண்டமுமருளாகியமெய்ம்மைப்
பொருளொன்றியவயனின்னனபுகலுந்துதிகேளா. (௪௨)

எற்றுக்கிவனுற்றுத்தவமினிதாற்றினையென்னாக்
கற்றைச்சடைமுடியான்கருணையினோடருள்செயலும்
வறறிக்கவினழிமேனியன்மழைகண்டெழுமயிலின்
முற்றக்கிளருவகைக்கடன்முழூகுற்றெதிர்மொழிவான். (௪௩)

துவற்றிற்கதிநடைகண்டதருக்குக்கடன்முழுதுஞ்
சுவற்றிக்கொடுநரகுந்துணையாகாவிடோய்த்துக
கவற்றிச்சிறையிடுவித்தருள்கந்தப்பெருமான்செ
யிவற்றுத்தொழில்யான்செய்கதிலென்றானெதிர்நின்றான்.

அற்றேனினதாவங்கமழலரோயிதுகேண்மோ
செற்றாபடைசெற்றித்தெறுஞாட்பிற்றிரணோக்கிப்
பற்றாதெனமற்றைப்படைபணிசெய்திடநிற்கு
முற்றாழல்வேலானலதருளன்முடியாதால். (௪௫)

துறைமுற்றியமறையாகமமங்கந்தொகுகலைக
ளிறைமுற்றியவிறையோனுலகெல்லாம்பணிகுரவ
னறைமுற்றியவிதழித்தொடைநாமுந்தொழுமாசான்
பொறைமுற்றியவவன்வார்கழல்புகலேபுகலாமே. (௪௬)

எய்யாந்தவறுடையார்க்கருளீயுந்திறநோற்பிற்
கையாந்தவறொருவிக்களியருள்வாங்கழல்போற்றி
மெய்யாந்தவமுழந்தாய்பிழைவீத்தாய்நமதருளான்
மையாந்தநின்விழைவுய்த்தருள்வான்பாலுறல்பெற்றாய். (௪௭)

இனியன்னவனருளுக்கொருவைப்பாயிலகுவையாற்
றுனிவின்றுயர்தவமாற்றியசூழென்றனன்கேட்டான்
புனிதன்முகமெதிர்நோக்குபுபுலவர்ககமிழதன்று
னனிவந்தெளிதருளுந்தலநவிலாயெனநவில்வான். (௪௮)

குருதித்தசைமிசையுங்குடர்மாலைத்தலைவேலான்
சுருதித்தலைமொழியின்பொருளெம்மைத்துளக்குறுத்தக்
கருதிக்கதியெவரும்புகுகணிகாசலமுளதவ்
வொருதிககினுநிகரில்லதினுறைகென்றுமறைந்தான். (௪௯)

சேட்டாரணமறியான்மறைசிவலிங்கம்வணங்கித்
தீட்டாமொழியறிவான்றிகழமகிழ்வோடுமெழுந்தான்
ஞேட்டாரணியஞ்சூழ்பதிதொழுதான்விடைகொண்டான்
கூட்டாகிளிதமிழ்தோதருகூடறபதிசார்ந்தான். (௫௦)

எட்டெட்டருள்விளையாடல்செயிறைவன்கழன்மலரின்
மட்டட்டியகுழலாளொடுவணங்கிப்புறனேகி
மொட்டொட்டிளமுலைபங்கினன்முருகார்மலர்க்குறையூ
ரட்டிட்டசிராப்பள்ளியையடைந்தான்றெழுதகன்றான். (௫௧)

எண்ணத்துயரியமாதவரீண்டும்புலியூர்போய்
விண்ணத்துயரியகோபுரமேகம்பரனுருவின்
வண்ணத்துயரியதோலின்வயங்காலயமெய்திக்
கண்ணத்துயரியலாதறுகதிமன்றுபணிந்தான். (௫௨)

ஆங்குப்புறவிடைகொண்டனனன்னத்திரள்சேக்கும்
பூங்கட்கமலக்குப்பைகள்பொழிதேன்மணம்வீசத்
தேங்கும்புனலெழுவாளைகடெங்கம்பழஞ்சிந்தும்
வீங்கும்புகழதிசைபோத்தவியன்காஞ்சியடுத்தான். (௫௩)

உயங்கும்பவமோரேழினுமுறுவல்வினைநீவித்
தயங்கும்பரபோகந்தருதனிமாநிழலென்றும்
வயங்குந்திருவேகம்பனைவாழ்த்திப்பஃறளியு
நயங்கொண்டுபணிந்தேத்தினனகரம்பிறகிட்டான். (௫௪)

எண்ணோங்கியசீபூரணநகரொல்லையகத்து
விண்ணோங்கியபுகழின்னசர்விளங்குங்குணதிசையிற்
றண்ணோங்கியமதிதோய்வளைதனகோசலையனையிற்
பண்ணோங்கியவாணிக்கொருபதிநாவினனுற்றான். (௫௫)

வேறு.

அண்டர்போற்றுமடக்கனோர்
கண்டுதாழ்ந்துகசிந்தனன்
பண்டைவேதம்பழிசசினான்
மண்டுகட்புனல்வாககினான். (ருசு)

ஆண்டிலிங்கமமைத்தனன்
மாண்டபூசைவயககினான்
பூண்டவேடப்பொலிவொடு
மூண்டருந்தவமுற்றினான். (ருஎ)

மூதுமைமாதவாமூசுதேன்
மதுவிராந்தொடைவானவர்
பதுமனோடுபடர்ந்துசெ
னுதுபுலததருநோறறனர். (ருஅ)

விருத்தராகியமெய்த்தவர்
விருத்தந்தீாதரமேவுமவ்
விருத்துவானகர்மேயதால்
விருத்தமாபுரமெய்ப்பெயர். (ருகூ)

பொற்றமாதவம்போற்றியே
யொற்றையாண்டொழிவெய்தலும்
பெற்றுவெறபிவாபெற்றிமை
யுற்றனன்னுயாமால்வனா. (சுய)

வேறு.

ஐந்கரமிலன்போடுநண்ணும்வேதன்
செய்கழற்காறகுமரனைழததிருவுந்திாத்தம்
பொய்கடியும்விதியாறறிறபுகுந்துதோய்ந்து
மெய்கதுவும்வினைமுழுதும்விழைந்துசெய்தான். (சுக)

மட்டுவிரிபொழிற்குன்றம்வலம்வந்தேறிச்
சட்டவிடாதபுமாவச்சசாயறபோற்றி
யெட்டுருவாங்குமாரலிங்கததிறைவன்பாத
மட்டமெதுமலாதுவியஞ்சித்தானல். (சுஉ)

வானுதிபூதஙகள்வயக்கிமாற்று
மானுதபேரறிவாமடலவேலண்ணல்
கானுருமலர்ப்பாதஙகசிந்துதாழ்ந்தங்
கூனுதியொருககியுணர்வயத்தனுனன். (சுங)

அன்றுபோய்வழிநாளங்கடுத்தகீழ்சா
ரொன்றுநீர்ச்சுனைநோக்கியுதனிற்றேய்ந்து
மன்றல்சூழ்சுனைத்தலையின்வைகிநாளு
நன்றுமாதவமாற்றுநடைமேதக்கான். (சுச)

மறைகதித்தவாறெழுத்தின்வண்மைநாடி
முறைகணித்துமுருகனருள்வடிவமுற்றப்
பொறைகதித்தவுளத்தமைத்துப்பொறிகளோப்பி
நிறைகதித்தமாதவத்தினிகழுங்காலை. (சுரு)

தன்னருளைப்பிழைப்பதேதண்டாச்செல்ல
லென்னுமதுமுன்றெரித்தவிறைவன்மீட்டுந்

மென்னுமதுதெரிப்பவாங்கெதிரோதோன்றும். (சுசு)

வேறு.

நலம்புரிந்தன்மினோர்கணண்ணியவெம்மைப்போலக்
குலம்புரிதேவதேவர்குருமணிமுடிகடாழ
வலம்புரிமுத்தம்போலவயங்குவொன்னுமாபோற்
சிலம்புகிண்கிணிகண்மற்றுஞ்சேவடிததுணையினார்ப்ப. (சுஎ)

வலத்தினர்கொள்பவென்னுமரபினைத்தெரித்திட்டாங்கு
வலத்தனித்தாள்சேர்ந்தாண்மைமாற்றலர்கழலுமாற்று
னலத்தருகழலென்றேதுநகைமணிக்கழல்கணடோகைக்
கலத்தலென்றுணர்த்துமாபோற்கலகலகலவென்றார்ப்ப. (சுஅ)

வெங்கதிர்மணிகால்யாத்தமேகலைமூன்றுதாங்கு
மங்கியுமிவனேயென்னவறிவுறுப்பனபோனின்ற
செங்கதிர்ப்பட்டுஞ்சோத்ததிருவரைநாணும்பாப்
பொஙகொளிப்பட்டின்சுற்றும்புகர்மலமூன்றுஞ்சீப்ப. (சுகூ)

மூவருமங்கத்தோர்பான்முகிழ்க்குமாசெய்யுமாண்மை
மூவரைகாட்டுமார்பமொய்வரையருவியன்ன
மாவிரைபொங்கும்பூந்தார்மணிவடம்பொற்றொல்லா
நாவலர்க்கடங்காப்பொற்பினகுகதிர்பிணைந்துதுள்ள. (எ0)

பூமுதலைந்தற்கீத்தல்புணர்த்தமைதெரிக்குமாபோற்
றேமணமலர்ந்துகற்பந்தளிர்த்துத்தேனுயின்காதாகிக்
காமுறவலம்புரிந்துகதிர்மணிமுகிழத்தசெங்கை
நாமறவஞ்சலென்னுவமைத்தருணயப்புத்தோன்ற. (எக)

ஆறிருகோடிவெய்யோரனைவருமொருங்குகூடி
வீறினும்பரிதிமுன்னர்வெண்கதிரொளமையாக்கும்
பேறிருங்கிரணக்கற்றைப்பெருவிலைச்சிறுகலாழி
மாறிரியடியாருள்ளமுழுவதும்வளைத்துக்கொள்ள. (எஉ)

பிரமாநாரணர்பல்லோரைப்பெற்றெடுத்தவர்க்குநல்க
வரமலிபாசமாழிவகுத்துவைத்திருப்பதேய்க்கு
முரமலிமுன்கைசசூழந்தவொளிரந்தபொற்றொடரிரேடு
கிரணவொணகடகமெங்குங்கேழொளிமயமாத்தேக்க. (எங)

வளையரோதோளன்றென்னும்வயிரவங்கதங்கண்முன்கைப்
புளைதபுகடகமிக்குப்பொலிபிரதாபங்காட்ட
நிளையிராசததின்மேலாய்நிகழுஞ்சாத்துவிகத்தாகு
முளைதகுகீர்தியும்பருற்றொளிர்முறைமைகாட்ட. (எச)

கடகமங்கதங்கணேரோகதிர்மதிமண்டிலத்திற்
சுடாதரவும்பரங்கிதறொருகதிமண்டிலஞ்செய்
படர்கதிர்க்குண்டலங்கள்பரிதிபன்னிரண்டும்வேறு
தடவளைபெறவொருங்குசாரந்தெழுகாட்சிதோற்ற. (எரு)

மண்டிலம்பிறழாதோங்கவயங்கிதழாயிரஞ்சூழ்
முணடகமேனின்றன்னமுகமதித்திலகமாதோ
கொண்டருந்தவர்கள்யோகிற்குறிகொடன்னுருவங்காட்டக்
கணடருகருணைவெள்ளங்கிதடொழுகமிழ்திற்பாய. (எசு)

இருவராயிருந்துதான்வேறெனவவர்தமக்குமேலா
மொருவனேயென்னவென்றாழொளிமதியாகிவேறு
யிருசுடர்விழிக்குமீப்பாலிலகரிவிழிகொலென்னப்
பொருகியதிலகமேலாற்பொழிகதிப்பட்டமின்ன. (எஎ)

சூவிதருமாறுதாரக்குருமலாமலர்த்துமாறு
சவிமுகப்பரிதிநாப்பட்டவிர்சிவனுருவஞ்செங்கே
ழவிர்மணித்திலகமீக்கணலங்கியவிதானம்பட்ட
மிவர்கதிரிலம்பகந்தோரணமெனவெழின்மிக்கீட்ட. (எஅ)

உதரபந்தனவோராழியொளியுரப்பலகைப்பல்கைப்
பிதிருறப்பெறழ்த்தோட்சேககைப்பிணைமுகப்பரிதிப்பொற்றோ
கதிர்மணிகிடுகுகூம்புகவினியமேற்போக்கென்ன
முதிரமணிதெரிந்துசெய்தமுயங்கொளிமோலிவாய்ப்ப. (எகூ)

அணிபரித்தொழுகிவார்ந்தவவிர்மணிச்செவிகள்சுற்றிற்
பிணிமணிவடங்கடேகிப்பிறக்கியதெனக்கவிழ்ந்த
மணிமுடிதரோமேற்போகின்வாகொடிக்குழாங்களாங்குத்
தணிவறவெழுந்துதன்னுந்தண்கதிர்க்கொழுந்துகாட்ட. (௮0)

கருங்கடல்வளைப்பிறசெய்யகதிரவனெழுந்ததென்ன
வொருங்கரததொகைச்சணூறுமொணசிறைக்கலாவமஞ்ஞை
நெருங்குபல்வன்னப்புள்ளிநிகழ்வெரிந்தலையிறவேற்றி
மருங்குபல்கணமுஞ்சூழமலரவனெதிரேசென்றான். (௮௧)

விண்ணவர்சொரிபூமாரிமெய்யெலாமினிமையாக்கத்
தண்ணுமைபதலைதக்கைதகணிச்சங்குடமுழாக்கள்
பண்ணிசைவீணைமற்றும்படாசெவிக்கினிமையாக்க
வுண்ணிறைதியானவேதனொளிர்விழிவிடுத்துக்கண்டான். (௮௨)

கதுமெனவெழுந்துதன்னுட்கருதியவுருவிற்றோற்றும்
விதுவணிபெருமான்மைந்தன்விரைமலர்ப்போதுதாழ்ந்து
குதுகலம்பொங்கக்கண்கள்கோட்டமெய்யிழுகுவெள்ள
முதுநிலநனைப்பச்சூழ்ந்துமுன்னின்றுதுதிகள்விண்டான். (௮௩)

வேறு.

வானுதிபூதமுதலானயாவும்வருவித்தளித்தியவைமற்
றூறுதவாவிதொழிலிற்கிளர்ப்பவடைவிற்புணர்த்தியவையா
யூறுதியூனினுயிராதியெண்ணிலுயிருக்குணின்றவுணர்வுந்
தானுதிநின்னையருளாகிநின்றதவரன்றியாவரறிவார். (௮௪)

துதையத்துவாவும்வடிவென்னமொய்த்திதுகடருமைந்துமனுவும்
வதிவுற்றியகருமுடலிற்பணித்திவளைந்தொழிற்குமுதலாய்க்
கதுவுற்றவொன்பதுருவுங்கலத்திகழலாதகாயமறிவாத்
ததைகிற்றிநின்னையருளாகிநின்றதவரன்றியாவரறிவார். (௮௫)

கலைகற்றிலாமையிளமைக்கணிற்றிகலைமுற்றுணர்த்துமுதிய
நிலைமைக்கணிற்றிநிகழ்வேதமங்கமுதலாகநீடுகலைகண் [ய்த்
மலைவற்றுணர்த்துபொருண்முற்றுமாதியவையொன்றுமன்றிவளர்மெ
தலைநிற்றிநின்னையருளாகிநின்றதவரன்றியாவரறிவார். (௮௬)

இழிவுற்றடுத்தமலகேவலத்தினிணர்வாய்ந்தலர்ந்ததருவி
னழலொத்தியாவியுருவாதியோடுமெணவுற்றபோதுசிலையி
னிழலக்கதிர்க்குமனலொத்தியன்னநிகழாதவீட்டினயமார்
தழலொத்திநின்னையருளாகிநின்றதவரன்றியாவரறிவார். (௮௭)

இருளத்துலப்பிலுயிர்மூழ்கிநிற்பவியல்விசசதேதுமிலதாக்
கருணைத்திறத்தினலகற்றவாவிகருவிப்படுத்திகருவி
மருவுமறவற்றுளுயிரசில்லவாயகிமயரற்றசுத்தநிலையிற்
றருகிற்றிநின்னையருளாகிநின்றதவரன்றியாவரறிவார். (அஅ)

திளைமாயைமோகவினையிற்பிணைந்தசெறியாவியின்பநிலையில்
வளையாவிடுப்பவுருமூன்றெடுத்திவழியூமிகைத்துநலனை
விளையாவளித்திவினையொப்புறுத்திவினைமாயைமூலமலநோய்த்
தளைவீழ்ந்ததிநின்னையருளாகிநின்றதவரன்றியாவரறிவார். (அகூ)

உயஙகப்பிணிகரும்வினையுங்கரந்துளுடனுய்முடித்தியதனை
வயங்கத்தெரித்திமறுகத்தகர்த்திவளராமைநூலின்முறையி
னியங்கப்புகுத்தியெரிகும்பியூடிமினைவித்திதோய்தலிலையாய்த்
தயங்குற்றிநின்னையருளாகிநின்றதவரன்றியாவரறிவார். (கூ0)

வழிநின்றுநன்றுபுரிகாலதன்றன்வழிபோலுடற்றுபயனுங்
குழிநிறபவுய்த்திகொடுமைததிறங்களகுயிலகாலவற்றின்வபு
பழியற்றுணர்த்துபயனும்புணாததிபயனென்றுமூததிறமுந்
தழிநிற்றிநின்னையருளாகிநின்றதவரன்றியாவரறிவார்.

நாளூற்றெழுந்தமதிபோன்மலங்கணலியத்தூரந்தவருதி
வாளூறறசெய்யசுடர்போலமூற்றுமடியக்கிளர்ந்துநிமிாதி
யாளத்தவிாந்ததிருமேனிதன்னையழலம்பிழம்பினறியத்
தாளுய்த்திநின்னையருளாகிநின்றதவரன்றியாவரறிவாா. (கூஉ)

பகைசெய்துநிற்குமூலகேதுமுள்ளம்படராதவண்ணமொளியின்
மிகைசெய்திருத்தியுடலூழெனைத்தும்விரவாமையேற்றுநுகரா
வகைசெய்துநிறகுமறிவுங்கெடுத்துமறியாமையின்பநிலையிற்
றகைசெய்திநின்னையருளாகிநின்றதவரன்றியாவரறிவார். (கூ௩)

கலங்காதநின்மெய்யருளிற்புகாதகலதிக்குணததிமூதையேன்
விலங்கோடிணைந்துமதியாதகுற்றம்விரவாமையன்றுகயிலை
நிலஙகாதிவிட்டியருள்செயயும்வைபபுநிமிாபூரணகிரியெனுந்
தலங்கோடிநின்னையருளாகிநின்றதவரன்றியாவரறிவாா, (கூச)

வேறு.

வேதமத்தகமளைந்துகிடந்தவிழுப்பெருந்துதியெடுத்துநவின்று
பேதைமைக்குணமிகுத்தகருத்தாற்பீடிலாதசிறுநாயடியேன்செ
யேதமத்தனையுமின்றுபொறுத்திங்கின்னருட்கருணைநல்குதியென்று
மாதாபொற்கமலபீடிகைமேலான்மறுவலுங்கழல்பணிந்துநிமிர்நதான்.

மரகதக்கதிர்தழைத்தகலாபமஞ்ஞைமீதுவருமஞ்ஞையொடொப்பான், வரநவிற்றுதிவழங்குதுமென்னுமகிழ்சிறந்துதிருவாய்மலர்விண்டான், பரவுவேதன்மகிழ்கூர்ந்துபடைக்கும்பண்பெனக்கருள்கவென்னவளித்து, விரவுபண்புடையையின்னும்வரங்கள்வேண்டுகென்னவயன்வேண்டுதலுற்றான். (கூசு)

வேட்டநல்வரமளித்துவிடுகெனும்வீறிலார்கள்பலர்விண்ணவர் மாட்டும், வேட்டநல்வரமனைத்தும்வழங்கார்வேட்டமாத்திரைவிளைப்பவர்சில்லோர், வேட்டநல்வரமளித்ததன்மேலும்வேறுநல்வரம்விளைவியப்ப, வேட்டவண்ணல்கருணைத்திறநோக்கிவிம்மிதப்புணரிவிம்முமுளத்தான். (கூஎ)

சிறந்தபத்தியடியேனினதாளிற்செல்வநல்குரவினும்புரிவாழ்வு
மறந்துநின்னடியாமாட்டுமிகந்தமதிப்புறுமையும்விருத்தபுரிக்க
ணுறந்துவாழுநாவெறுக்கையராகியுன்னுகின்றகதியெய்தலுமங்க [டும்.
ணறந்தழைத்தசிவலிங்கமிறைஞ்சுமன்பரொன்னுலகமெய்தலும்வேண்

இத்தலைப்படுதிருத்தமெனுமமெய்தவுந்தலைவவின்றுவைகாசி
யொத்தபூரணைவிசாகமடுத்தவெண்மையாலிவையடுத்துறுகாலைப்
பைத்தவிப்புனல்படிந்தவர்மும்மைப்பாதகங்கள்பலவுந்தபநூறி
மெத்துசெல்வமலியென்னுலகெய்திவீறவுங்கருணைநல்குதல்வேண்டும்

அளியனிங்குநவிறுருத்திரமோதுமன்புளார்கவிதைநான்குநடாத்துங், களிமிகுங்கவிகளாகிவளங்கள்கஞலியெப்பிணியுமுப்புடைகண்டாங், கொளிசெய்நின்னுலகமெய்தலும்வேண்டுமொருவவென்னவரமுற்றுமளித்து, நளியருட்புணரியாங்குமறைந்துநலத்தகோயிலினைநண்ணினனன்றே. (க00)

பவளவாய்ச்சிறகரோதிமமூரும்பண்ணவன்களிதழைத்தனனேகித், துவளிடைக்கலைமணாட்டியொடண்மித்தொன்றுபோலுலகளித்திடலுற்றான், குவளைபூததொளிருமத்தகுதீர்த்தங்கோதறும்பிரமதீர்த்தமெனும்பேர், திவளிரும்புகழினோடுவிளங்கித்தேவரும்படியநின்றதையன்றே. (க0க)

எப்பெருங்கலையுணர்ச்சியரோனுமெப்பெருந்துயருழந்தவிடத்து, மப்பெருந்துயரமீட்டும்விளைகுமத்தகுந்தொழின்முயங்குவதன்றி, யொப்பருந்தலைவனமெய்யருளின்பவுததிமூழ்கும்வகைதன்னைமுன்னா, பப்பருந்துயர்பல்காலுமுழந்தும்பங்கயன்றொழிலைமீட்டனன்மாதோ.

விண்ணவர்க்கவியினின்பம்விளைத்துமேதினிக்குமுறையாவும்விளைத்துங், கண்ணுதற்பரனடித்துணைநாளுங்காதலன்புவளர்பூசைவிளைத்து, மெண்ணமிக்கமுனிவீரயனேற்றங்கெய்தருந்தொழின்மைபெற்றமைசொற்ற, மண்ணனந்திதவமாற்றுபுசெவ்வேளருள்கிடைத்தவுயாகாதைதெரிப்பாம். (௪0௩)

பிரமன்சிருட்டிபெறுபடலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௭௧அ.



## நந்தியுபதேசப்படலம்.

மண்ணவருக்கிரும்புனலாய்த்தோன்றநின்றேமண்ணமிர்தும்விண்ணமிர்தும்வழாமையாக்கும், விண்ணவருக்கிருந்தீர்த்தமாகித்தோன்றிவிண்ணமிர்துஞ்சிவவுலகும்விரவவுய்க்கும், பண்ணரியமாதவத்தோர்க்கருளாய்த்தோன்றிப்பரபோகவமிர்தமாய்ப்பலியாநிற்கு, நண்ணரியபுகழ்க்கடம்பனழைப்பநந்திநந்தினியாந்தத்துவாமிர்தந்தானே. (௧)

வேறு.

மாங்குயின்மிழற்றுமொழிமங்கையுமையாளோர்
பாங்குறமடங்கலணைமீதுபயில்வெள்ளி
யோங்கலினொருத்தனுயிரோம்பியவெழுந்த
வீங்கருளினேடினிதிருந்தருளும்வேலை. (௨)

நெற்றிவிழியாளர்நிமிருந்தலைமைபூண்டோர்
துறறதலைமாலைதவழ்தோளினர்களெல்லாம்
பிற்றகையமுற்றவிர்பெருந்தகைமைநந்தி
யுறறடிவணங்கினனுளக்குறைதெரிப்பான். (௩)

ஓதுமறையாகமமுயாந்தகலைமுற்று
மேதமகலக்கருணைநோக்கினெனைவைத்துத்
தீதறநவின்றபொருடெள்ளிதினளித்தாய்
மேதகையவாகமவிழுப்பனுவன்மாட்டு. (௪)

முப்பொருளிலக்கணமுமுப்பொருளினென்றச்
செப்புநினதின்னருள்செறிந்தடியினென்று
மப்பெரியமுத்தியெனுமாரமிர்தவாரி
யெப்பொழுதுமூழ்குவதுமெய்தவிலனெந்தாய். (௫)

அன்னவைதெரித்ததினழுத்திவிடல்வேண்டுந்
தன்னிகரிலாநிமலசங்கரசயம்பு
கன்னியொருபாககருணைப்புணரியென்றாப்
பின்னரும்வணங்கிமுழுவற்கடல்பெருத்தான். (௬)

திருகுமிருவல்வினைதிருந்துபரிபாக
மருவுதலுறுத்திமெய்வழங்குமொருவள்ளல்
கருணைநனிபொங்கியதெனககதிர்கிளர்ப்பக்
குருநகையினர்திமகிழ்கொள்ளவருள்விள்ளும். (௭)

ஐந்தொழிலியற்றரசிருக்கைகயிலாய
மைந்தொழில்கடந்தவருளாகுமஃதிங்க
ணநதின்மிகவுந்தெரிவுறுக்குமடைவில்லை
யர்தவருளுக்குரியதாநதணிகவெற்பு. (௮)

ஓருமறைநாடரியவுண்மையெனுஞான
மாரவருள்பெற்றடியழுந்துமதனாற்சீ
பூரணகிரிப்பெயர்பொருந்துமளவில்லா
வேரணவுநம்முருவமாயிலகுமன்றே. (௯)

எங்கணெவருஞ்சிறிதுமோருநமக்கு
மங்கணுயிர்யாவுமடிசேரும்வகைநாடித்
தங்குமிளையோனருடருங்குரவனானன்
புங்கவனவற்குநிகர்பூரியரும்விள்ளார். (௧௦)

வெய்யமலவேர்துவரவீட்டுநெறியன்றிப்
பொய்யமலநின்றமதம்புக்கவருநாளு
மையனெனவந்தடிபணிந்தறமுஞற்றி
யுய்யும்வகையுநகருணையுய்த்தவணிருக்கும். (௧௧)

அன்னவனையேசரணடைந்தவணிருந்து
மன்னியபெருந்தவம்வழாதுபுரிகிற்பிற்
றன்னுமறைநாடரியதுத்தகையவேணி
னன்னருளமிக்குவகைநாறவெதிர்தோன்றி. (௧௨)

திரைத்துமணிசிந்திவருதெய்வநதியொன்று
விரைத்தவணடுத்துறவிளித்ததினழுத்திப்
புரைத்தசிவவாரியும்புகுத்திவிடுமம்ம
வுரைத்தநதிமூலமுமுரைப்பமறிமைந்த. (௧௩)

வேறு.

திருமகட்குரியதாய்ச்சிவனுந்தன்னிய
விருநிலநதெரிப்பவவ்வேழைகொங்கையி
னுருவவன்கனிபடும்வில்வமோங்கிய
பொருவில்சீரவில்வமாபுரமொன்றுள்ளதே. (கச)

இருடபுநமக்கரசிருகைகயாகிய
திருவளரத்தருதேளத்துநம்முடை
யுருவமானயங்குவட்டோங்கலுள்ளது
தருபெயாவில்வமாசயிலமென்பதே. (கரு)

கஞ்சவெற்பென்னவுங்களைவாயோசனை
யஞ்சதனுயரமவ்வளவும்பூமியுட்
டுஞ்சுறசசிகரமேதோன்றநின்றெழில்
விஞ்சும்யோசனையொன்றுவிரிவினெல்லையே. (கசு)

தெய்வமேகமழுமச்சிலம்பினுச்சியிற்
சைவதத்துவமயதீர்த்தநதானுள
துய்வகையெம்மொடாமொருமையெய்துவான்
கொய்வளம்புகழ்சனற்குமரனணுபு. (கஎ)

தேஙகியபெரும்புனற்றீர்த்தமாடுறீஇப்
பாங்கிருந்தருந்தவம்பயிற்றிநம்மடி
யோங்கியபூசனையொழிவில்பததிமை
தாங்கியாற்றுபுமகிழ்தழைப்பவைகுமால். (கஅ)

அத்தகுதிருத்தமங்காறுகொணடெழ
வுததமனுன்பொருட்டழைக்குமென்றுபின்
விததகன்விடைதரவணங்கிமெய்யருள்
பொத்தியவுளத்திறன்போதன்மேயினன். (கக)

வேறு.

கயிலையங்கிரியைவணங்கினனீங்கிகாமருபேசுரம்பரவிப்
பயிலியநாகேசுரஞ்சித்தவிடமும்பணிநதுமாமகேசுரந்தாழ்நது
வெயின்மணித்தேனுசிலைநன்கேதாரம்வீமகோடாரமுமிறைஞ்சிக் [ன்.
குயினுழைசோலைகெண்டகைவளாகூர்மாசலந்தொழுதனனகன்று

பரவியபிரமராசலஞ்சித்தபங்கமேமமஞ்ஞைபங்கமெத்தி
யுரனருளிடபமால்வரையுருபயிரவமொளிாவிருபாககம்
வரநனியருளும்வில்வகஞ்சோமகேசுரமாரகயகாளம்
விரவியசீர்த்திப்பிப்பிலாரணியம்வாரணுசியும்வியந்தகன்றன். (உக)

தெள்ளியதிரியம்பகர்தருகாளேசுரஞ்சங்கமேசுரந்தெரிசித்
தொள்ளொளிவிரிக்குமல்லிகார்ச்சுனமுமோங்குகாளத்தியும்போற்றி
வள்ளவாய்க்கமலமிரவினும்விரியவாளராவுமிழந்தசெம்மணிக
ளள்ளொளிகதிர்க்குமடுக்கல்சூழ்சீபூரணகிரிதொழுதுசென்றடுத்தான்.

வெறிகமழ்கமலவோடையுந்தடமுமவேறுசூழ்வீராட்டகாசக்
குறிகுணங்கடந்தசச்சிதானந்தன்குரைகழற்றுமமைவணங்கி
நறியசெங்கடப்பந்தாரணிசாமிநாதனையாவயிற்பணிந்து [வான்
செறிபொழிலுடுத்துமுகிற்படாம்போர்க்குஞ்சிலம்பினையிவர்தரச்செல்

வேயினமுருத்தநித்திலக்குவையும்விரிபணப்பொறியராவுமிழ்ந்த
பாயிருள்பருகுஞ்செம்மணிக்குவாலும்படரிருள்குப்பைகொண்டன்ன
மாயிருமணியும்பளிக்கினமணியுமாழையின்திரளுமோராங்குச்
சாயிளந்திங்கட்கண்ணியான்முகத்திற்றயங்குவகண்டுளமகிழ்ந்தான்.

முழங்கிசையருவிவீழ்ந்தகழ்வரைப்புமுடலையாக்கையினெறும்பொ
ருப்பர்,கிழங்ககழ்வரைப்புமுடிகமகழுங்கேழ்கிளர்வரைப்புமொள்வயிர
ம்,பழங்கணுற்றமுங்கவிறைசடிலவலாரிபற்றியவச்சிரஞ்சிதாத்துத்,தழங்
கிசைக்குரிநாதன்மிசைவீழ்த்திக்கொணடெனததயங்குவகண்டான்.

களிற்றினந்தம்முட்கலாங்கொடுகறைவன்கால்பொரக்கழைமணி
சிதர்ந்த, வொளிற்றுவெணபூழிபோர்த்துவெள்ளென்னவுருவெலாங்க
திர்ப்பமிக்கிலிப், பிளிற்றொடுபொருவமுருகனைத்தவத்தாற்பிடர்ததலை
ச்சுமத்துவானடுத்த, வெளிற்றுடலிபங்கள்பொழுதுபோருழக்கும்வேற்
றுமைதேற்றுவகண்டான். (உசா)

செழுங்கலைமதியங்காண்டொறுமதன்றன்சிலைகளுந்தீம்புனற
பெருக்காற, கொழுங்குளிரபெருக்கவிரவிகாண்டொறுமக்கொற்றவன்
சிலைகளுங்கனலா, லழுங்குருப்புறத்தும்வரைநலூழடுப்பினுருநன்றே
செய்த்தீதின், விழுங்குவெர்துயரம்யாவருஞ்செய்யும்வினைத்திறங்காட்
டுவகண்டான். (உஎ)

விடரளைப்பூழைத்தூங்குவீங்கிருளும்வியன்றலைவாயிலிற்கிடந்த
சுடர்பளிக்கறையிற்றோறியபரிதிச்சாயையிற்றூவொளியிரித்திட்
டடர்மலர்தூமியச்சிவம்பிரகாசமாகியவடியனாயடுப்பின் [ன்
மடவருந்தூயராவரொன்றுணைக்கும்வாய்மையைத்தெரிப்பனகண்டா

இருவகைமாயைகாரணமாகவிலகுபல்புவனமுமிழைத்து
மருவுமப்புவனத்துயிர்களைப்புரப்பவதிதரும்வள்ளல்போற்சிலம்பி
பொருவினூல்வலந்துதங்கியவலயம்பொலிந்தபைம்பூவைகண்மாயன்
புரிதிமார்பணிந்தகருநிறத்தவுணப்பதகனிற்றோன்றுவகண்டான். ()

தூயவிஞ்ஞானசலாக்கருடானேதோன்றுமாறெனமயிர்க்குட்டி
மேயவணுருவாய்த்தன்னுருசகழிக்கும்விம்மிதமொருபுறங்காட்ட
நாயகனெதிர்நின்றருணமயமாகருநன்மையாரொனப்புழுககுளவி
யாயவற்புதமுமொருபுறங்காட்டவானந்தமுகிழ்தெழக்கண்டான் ()

தாரொனப்பூக்குமராமரந்தடைஇயதாமங்கடேக்குபொன்னிதழி
யேரியற்பாவையேந்துபைங்குரவமீனைமானுடம்பழுகிலுத்தம்
வேரியநதிமிசுமிரவிதேராழிமெலியவாங்கதறகெதிருளை
நேருவபோலதேத்திருல்சுமந்துநிமிரவனவிடந்தொறுங்கண்டான் ()

ஆயிரத்தோரெட்டண்டமும்பரிக்குமவுணனையஞ்சியாங்காங்கு
மேயினகுலிசப்படையினரெல்லாம்வேற்றுருக்கொண்டனரெனமிப்
பாயினபுகழான்பதந்தொழப்பெற்றுப்பரிவுதீர்ந்தாப்பனபோலக்
காயிலைப்பொழிறகட்கணபடுமுடலக்களிமயிலகவுவகண்டான் (கூ௨)

கழிமதக்களிறுகாருமென்றுளியகனைகுரலருவிகூடிருந்தேன்
பொழிமலர்மாலைவிரிவமுன்பணியும்வைகறைப்பூப்பபின்பணியும்
வழிவளாவேள்வித்தீயிளவேனின்மாதவத்திமுதுவேனி
லொழிவுறுமிருதுதொறுமொழியாதவிருதுவேறுஞற்றுவகண்டான். ()

தெங்கினெணபாளைவானரமிதிப்பத்தீங்கனிதுடுமெனவீழ்ந்த [ப்ப
பொங்குநீர்ச்சுனையின்புடையுளாதோகையுள்ளனவெரீஇமுழைசசே
வங்கண்வாளரவங்கமுகின்மேற்றுவவதன்றலைத்தவழ்சுடரஞ்சித்
துங்கவன்கோயிற்கொடித்தலைமஞ்ஞைத்துணையடிதாழவதுகண்டான்

பொறிபடுதுறுகலெனநினைந்துறங்கும்புலிவெரிர்தலைநெறுநெறென
வெறிசுடாககுவட்டின்முசுவிலங்கிநதிட்டெழுந்துயாசோலையைவாவக்
கறிவளாசாரலுழுவைகனமலாதநுககதுமெனவெதிரநிலைக்குவடு
முறிபடத்தாககிமுதிர்சினங்கடவிமுழங்குபுவெள்குவகண்டான். (கூரு)

காலணிசிலம்பிற்காய்க்கும்வெட்பாலைசாலெனககாய்படுங்கோங்கம்
வாலறுமணிலிறகாய்களுலிலவும்வேலியின்வாயசடிவனைதக்
கோலமுந்தீம்பூமரங்கருபபூரங்குங்குமமிலவங்கங்கோட்ட [ளை
மேலமும்விடுகருமுருகெதிகொள்ளவெழில்வளங்கணடுகண்டடுத்தா

கனைத்தலையண்டமனைத்தடைகிடக்குங்களிமயில் கயிலையந்திாத்தந், தினைதலைசசினையைநோககியமீனஞ்சிந்தைசெய்கூர்மமிம் மூனறும், வினைத்தபூங்கடம்பனூற்றினஞ்சேக்கான்விழுத்தகவுன்னலானருளைத, தனைத்தலைவழங்குநதிறததினைககாட்டததழைத்தநெஞ்சொடும்புனலபடிந்தான். (கூஎ)

வந்தடிபணிந்தமாதவர்க்கங்கைமலரெடுத்தெதிர்ந்தவாத்தழுவி
யந்திலாதனத்திலிருந்தமூதறிவோர்க்கஞ்சலிவணக்கமுமளித்துக் [ஞ்
கொந்தவிழ்சோலைக்குன்றுசூழபோகிகுருஉமணிகுயின்றொளியசம்பு
சுந்தரச்சோபானங்களினிவர்ந்துசுடர்மணிகோயிலைச்சார்ந்தான். ()

மணிகுயின்றெடுத்தமாடநீண்மறுகுவலம்வந்துமயிலிருந்தகவுந்
திணிநெடுங்கொடியுமூர்தியுநின்றதிருமுன்னர்த்தாழ்ந்தெழுந்தேகித்
தணிகுநரிடுக்கண்டாழ்த்தருளாவச்சகாயனைத்தாணமலர்பழிச்சித்
துணிமதிமலைத்தகுமாரலிங்கத்துத்துவரொளிவண்ணனைத்தொழுதான்.

ஆவயினகன்றுபுணர்தொறும்புதிதாயணிததுமாயருமறைச்சிரமும்
பாவனைத்திறமுங்கடந்தெழுமின்பப்படரொளிப்பிழம்புருவான [ய்
வாவியையிச்சையறிவொடுதொழிலென்றவையொருமூன்றுமூவிலையா
மேவியமணிவேல்வலனுயர்த்தருளும்வீரனையணுககனுய்த்தொழுதான்.

வேறு.

விழிகாலருவிகளடியூடிழிதரவிரிபூவனையகைமுடியேறப்
பொழிமாமறைமொழிவிரியப்புலன்வழிவிரியுற்றலமருபொறிகூம்ப [ய்த்
விழுதாயுருகுளம்வயிரத்தொடரெனவிமிழ்கொண்டடிமலரிறுகப்போ
தொழுமாதரவினனுழுவற்றொடுகடன்முழுகித்துளைபவன்வழிநாளான்.

திரையுந்திரைதவழ்நறுநீர்முழுகுபுதிருநீறுடன்முறையொளிரவி
த்து, விரைதண்மலர்தளிர்கனிகாயமதுமுதல்வெற்பிற்பொதுளுவசமு
விசென, றுரைநெஞ்சுடலமுமதியாமுருகனதொளிர்தாணறுமலர்வழி
பட்டுக், குரைபைம்புயறவழ்கிரிசூழ்பொழுதொருகுகைமேற்றிசையெ
திர்கண்ணுற்றான். (௬௨)

கோலத்திணிவளைவாய்விண்டளவொளிர்குருமாமணிஞெமிர்கு
கையண்மி, ஞாலத்துயர்கெடவருவானுயர்தவநன்றுறறியவிதுதகுமெ
ன்றுச், சாலத்தனதுளநினைகின்றுழியுயிர்தணிவுற்றுழியலதடிசேராச்,
சீலத்திளையவனருளாலொருமொழிதிகழ்வுற்றதுவிரிவெளியூடே. (௬௩)

வற்றுமதம்விளைபஞ்சேந்தியவருமலைவென்றவர்பலர்தவமுகக்கிப்
பெற்றாருயரியசித்திதிறமிவணதனுறபிழைதபுகுகைநாமங்
கற்றோருவினாசித்திகுகையெனமொழிவர்கழிதவமிதினீயு
முற்றுதரியினிநந்திக்குகையெனவுரைதிக்கெழுமெனுமொழிகேளா. ()

விடையம்பொறிவழிமறவிக்கனவினும்வெஃகாதவைவியவித்தட்கு
நடைவிஞ்சியவுளமகிழ்மிககெழுதரநந்திக்குரிசிறவிர்ந்தியோகி
னிடையும்வளிநடுவழியூடினிதெழவெழுதோவியமெனவசைவற்று
ளடையுஞ்சுடர்விழியிருமுர்நிலைகளினடைவிற்படர்வனபடர்வுற்றான்.

ஆறுதாரமுமுறையிற்சழிதலுமவிழாயிரவிதழரவிந்தத்
தேறுரூடமதெனவைத்தருளியவிறைபார்ப்பதியிருபுடைவைக
வீறுபாபலபரிசனமுங்களுனுறவினைவென்றவர்பலர்தொழுதேத்தக்
கூறுவருமறையோதப்பயில்வகைகுமரன்றிருவுருநினைகின்றான். (சசு)

வேதத்துயரியவாறக்கரமனுவிரிநாவகமலாபயில்கிற்ப
வேதத்தனிமலவலிசிந்தியவுளமெழிலாரிறைவனதடிமுழக
நாதத்தலைவளாபோததிருவுருநாளும்வழிபடுநலனேடும்
போதுறறனனவன்வினையின்றிரிவொடுபோதுற்றனசதுருகநான்கு. ()

விண்ணோரவுணாகண்முதலாவனைவரும்விற்றுன்றியவிவன்வி
ழைவென்னென், றெணணுவலமரவினைமாதவனிடையெதிரின்றெழுத
ருமருளோடுந், தணணாமதிமுடியிறைவர்க்கருளியதலைவன்மயினமி
சையெதிரநின்றான், மணணுவொளிவிடுமணிபோல்பவனடிமலர்வீழுந்
தருமறைமொழிகிறபான். (சஅ)

வேறு.

தடவியவுளத்துச்சேககாத்தற்பரானந்தபோற்றி
யிடவியசெய்யநெஞ்சத்திறைகொளுமிறைவபோற்றி
மடவியமலஞ்சேதித்துவரமருள்வள்ளல்போற்றி
நடவியமஞ்ஞையூாதிநாயகபோற்றிபோற்றி. (சகூ)

வேதனுயுலகந்தோற்றிவேதனெணணரியாய்போற்றி
மாதவனுக்கிக்காத்துமாதவற்கெய்தாய்போற்றி
போதனுய்ததுடைத்துப்பூத்துவேறுமாய்ப்பொலிந்தாய்போற்றி
யாதியீறிடையுமாகியவையொன்றுமணுகாய்போறறி. (ருo)

ஐம்படைசுமந்தவாளியண்ணற்குமண்ணல்போற்றி
நம்பன்மெய்பாதிசெய்தநாமவேனம்பிபோறறி
வெம்படைவீரர்தாழும்வீராகரும்வீரபோற்றி
யும்பரினும்பாபோறறுமும்பாகருமும்பபோறறி. (ருக)

வெளியிடையொன்றாய்நின்றவெளிமுதல்வெளியேபோற்றி
வளியிடையிரணடாய்நின்றவளிமுதல்வளியேபோறறி
யொளியிடைமூன்றாய்நின்றவொளிமுதலொளியேபோற்றி
தெளிபுனனான்காய்நின்றதெளிபுனன்முதலேபோற்றி. (ருஉ)

படியிடையைந்தாய்நின்றபடிமுதற்படியேபோற்றி
சுடரிரண்டாகிநின்றசுடரினுட்சுடரோபோற்றி
யுடலுயிராகிநின்றவுயிரினுளுயிரோபோற்றி
தொடர்செயெண்பொருளுமெய்யாத்துன்னியபுராணபோற்றி. (ருந)

முந்தியபொருள்களெல்லாம்பிந்தமுந்துள்ளாய்போற்றி
பிந்துறுபொருள்களெல்லாமுந்தப்பிந்துறுவாய்போற்றி
மந்திரப்பொருள்களெல்லாம்வழுத்துமந்திரத்தாய்போற்றி
வெந்திறற்படைகளெல்லாம்வியத்தகும்படையாய்போற்றி. (ருச)

பொருள்வளர்குணங்கண்மூன்றும்புரட்டுமெண்குணத்தாய்போற்றி
வெருள்வளர்தொழில்களெல்லாம்விளிக்குமைந்தொழிலாய்போற்றி
மருள்வளரறிவுமுற்றுமாய்க்குமொள்ளறிவாய்போற்றி
யிருள்வளரிச்சைசிந்துமிசைமிகுடையாய்போற்றி. (ருரு)

ஆணவமூலமைந்துமலமெனுமிருளோராறு
மேணறத்துமிப்பவில்லிட்டிலகறுமுகத்தாய்போற்றி
பேணுறுதிசைமேல்கீழும்பெருகிருஞானமுய்ப்ப
மாணுறுவதனந்தோறுமலரிருவிழியாய்போற்றி. (ருசா)

மலாமுகப்பரிதியஞ்சிவான்சதிரிராறுந்தாழ்வுற்
றிலகுவதென்னக்காதினெரிமணிக்குழையாய்போற்றி
யலாகதிரவதனவென்றாழ்ககலர்ந்ததாமரைகளென்னக்
குலவியதளிர்க்கையுந்திருவாகழற்பதத்தாய்போற்றி. (ருஎ)

தெறுதழற்பிணிகண்மண்ணுஞ்சிவகங்கையாளுய்போற்றி
வெறிகமழகயிலைக்கங்கைத்தீர்த்தமாய்விரிந்தாயபோற்றி
பிறவிதீர்ஞானசத்திதரனெனும்பெயராய்போற்றி
யறிஞர்சூழ்ந்தேத்துஞ்சீபூரணகிரிக்கதிபபோற்றி. (ருஅ)

நயந்தெதிரபழிசசிநின்றநந்தியையுடலந்தைவந்
துயங்கினைபோலுஞ்சாலவுயர்தவமுழந்தென்றையன்
வியந்துநீவேட்டதென்னேவிளம்புதிதருதுமென்றுன்
முயங்கியதவத்தான்மீட்டுமுன்பணிந்திதனைவேண்டும். (ருகூ)

வேறு.

சிவதத்துவவமிர்தப்பெயர்சிவனூருகுளிர்தீர்த்த
மிவணுந்தியின்வருவிததிலெலைமுக்கியெடுததுப்
பவமுற்றியபாசம்பசுபதியின்றிறமருளிச்
சிவததுவவமிர்தக்கடறிகழவித்திடுகென்றுன். (சா0)

தெருளொன்றியவரநல்கியசீபூரணகிரியா
னிருதிததிசைமுகனுயினனிகழ்தத்துவவமிர்தம்
வருகென்றுகைமலரின்றலைவளைவித்தனுமுக்கால்
வெருவிச்சனமுளையும்படிவிளைவுற்றதுவருமால். (சாக)

மங்கைக்கிடமிட்டாகியவரதன்முடிமமேவிற்
கஙகைப்புனல்பொங்கிப்புடைகவிழ்கின்றதுநிகரத்
துங்ககிரிமுடியிற்றவிர்தோயங்கடிதிழியா
வங்கட்புவிகிழியப்படராறுயெழுதருமே. (சுஉ)

சந்தக்குறடகிலின்றுணிதரளக்குவைபெயரா
வுந்திக்கனவயிரங்களொதுக்கிப்புடையெதிருங்
கொந்துற்றலர்தருவுங்குவடுகளுந்தலைமறியப்
பந்தப்படுசிறையும்பலபறையக்கடுகியதே. (சுஙு)

ஒளிர்பொன்னணிமலைமாதுளமுளையப்புவிவீழா
நெளியப்புடைதவழாவுடனிமிராநடைகொள்ளா
வளிபிற்படவோடாமலிமழலைக்குரல்பயிலு
மளிமுற்றியசிவதத்துவவமிர்தப்புனன்மகவே. (சுச)

மலதததுவவிருள்கண்டெடிாமருவத்தவவெருவி
யலறிப்புடையிரிவுற்றெனவருவிக்கடகரிகள்
பலவன்றிகளுளியஙகலைபதறிக்குளிறுெலியின்
விலகும்படிவிரிவுற்றதுசிவதத்துவவமிர்தம். (சுரு)

நஞ்சேர்திருளரவந்தபுத்தரவங்கொடுநலியும்
பஞ்சேந்தியவிபமாதபுத்திபமாபலதழுவி
மஞ்சேந்தியகாயந்தொாகவருகாயமகற்றி
யஞ்சேலெனவுல்வுற்றதுசிவதத்துவவமிர்தம். (சுசா)

இரணடற்றுளிர்சிவதத்துவமினிதுய்த்தருள்புகழ்போல்
வரண்டித்திரைதருநிததிலமணியும்பன்மருப்புக்
குரண்டத்தொகையன்னத்திரள்குருகின்கணம்வலைக
டிரண்டொத்ததுநுரைபொஙகியசிவதத்துவவமிர்தம். (சுஎ)

கலவும்பொறிவிடயம்படைகாமாதிகளாக்கி
நிலவிஞ்சியினனையற்றபநிகழுந்தனியொளிபோ
லலாகுங்குமமருதந்தளிரவிரிங்குலிகங்கொண
டுலவுற்றதுசிவதத்துவவமிர்தப்புனலுந்தி. (சுஅ)

வேறு.

சிலம்படிசிலம்பச்சூழ்ந்துதிங்குழற்கானந்தோற்றி
யுலந்தவிர்பண்ணைமுற்றியாழிகைக்கொள்ளுநீத்தக்
குலம்புரிநங்கைசெவ்வேள்குன்றினைவலமாய்ச்சூழ்ந்து
நலம்புரிந்தருள்வீராட்டகாசத்தைநண்ணிற்றுலோ. (சுகூ)

அங்கண்வீற்றருளுமுக்கணமலனைக்குமரவேளைச்
செங்கழற்போதுபோற்றிச்சிலகங்கைமருங்குதாழ்ந்து
வங்கமொன்ரென்றின்முட்டி மறிதரசசோப்பரார்ப்பப்
பொங்குவெணடரங்கத்தெணணீரப்பொருகடல்கிழிதததன்றே. (எ0)

சுரும்புகண்டுளித்ததேறற்றுய்த்திசைமுரன்றமுசுங்
கரும்பொடுமசோகஞ்சூதங்கமலமுற்பலமேமுல்லை
பெரும்புனறமுவும்பெற்றிபெட்டுவீடாடுவோர்பாற்
பொரும்பரிசறவேள்செங்கைப்போர்ப்படைபறித்ததொக்கும். (எக)

தத்துவவமிர்தமென்னுந்தற்பரந்தீர்த்தமாயுந்
தத்துவவமிர்தநாமந்தரித்தெனக்கொன்றைதும்பை
மத்தம்வெள்ளெருக்கடம்புவன்னிபாசறுகுகோடென்
றித்திறவணியுமுன்போலிசைந்துருக்கவினத்தோன்றும். (எஉ)

காத்தலைமருவலானுங்கடிதடந்தோற்றலானும்
பூத்தலைமலைதலானும்போகமும்புணாத்தலானு
மேத்துவிணணவருந்தாழவின்னிசையெழுப்பலானுங்
கூத்தொடுமியறலானுங்கூத்தியர்புரையும்வாரி. (எங)

கொக்கினமிறுத்தலானுந்தோலொடுகுலாவலானு
மக்கரைவலைத்தலானுமாடுறுமரவத்தானு
முக்கணெம்பெருமான்செவ்வேன்முருகனென்றிருவர்போலுந்
தொக்கபன்மணியுஞ்சாந்துந்துறைதுறைகளுற்றும்வாரி. (எச)

தானங்கைக்கோடலானுந்தகுவளையடங்கலானுங்
கானங்கொடருவின்மாதர்களிதழைப்பிததலானும்
வானங்கொளிறைமால்வேழமுவருமானுமென்ப
பேனங்கொண்டார்த்துப்பைத்துப்பெருங்கடன்மடுக்கும்வெள்ளம். ()

கடம்படுதோற்றத்தானுகடலகம்புகுதலானு
மிடம்படுகோட்டினுனுமிபமுகனோதலானுந்
தடம்படுதுளைக்கைச்செம்மலசண்முகன்பொதியத்தோன்றல்
குடம்படுமொலிநால்வர்போன்றதுகுரைநீர்வெள்ளம். (எசு)

கலைவளங்கோடலானுங்கரமலையிருத்தலானு
நிலைனிலையாகுந்தோற்றநிகழ்தருபுணாப்பினுனு
மலர்புகழீசன்மாயோனகத்தியன்மாதர்வெற்பென்
றிலகுமிவ்வைவரோடுமிணைவதுபொருநீர்நீத்தம். (எஎ)

